# "ஒற்றுமை"

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேராதார்."—திருக்குறள்.

புஸ்தகம் V
Vol. V

1924ஞு டிசம்பர்மீ

சஞ்சிகை 2
Issue 2

## தோத்திரம்

1. ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும், [1]வாட்டடங்கண்
மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்?
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே, விம்மிவிம்மி மெய்ம்மறந்து
[2]போதார் அமளியின்மே னின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள், கிடந்தாள், என்னே என்னே
ஈதே எந்தோழி [3]பரிசு! [4]ஏல் ஓர் எம்பாவாய்!

(மணிவாசகர்.)

---

1 *விசாலமான ஒளியையுடைய கண்கள்.* 2 *புஷ்பம் நிறைந்த படுக்கை.* 3 *நடந்து கொள்ளும் விதம்.* 4 *எழுந்திரு.*

# தமிழ்மொழி தனிமொழியே

தமிழ் என்றசொல்லே தான் தனிமொழி யென்றும், தன் சிறப்புக்கோர் அறிகுறியாக தன்னுடைய சிறப்பெழுத் தொன்று கோத்துள்ள தென்றும், தொன்று தொட்டு வழங்கும் மொழி யென்றும், வெள்ளிடை மலைபோல் விளங்கப் பெற்றும் ஆரியத் தின் வழிமொழியென்றும், வடமொழி யிலக்கணமே தமிழுக் குரியதேயன்றி பிறிதில்லை யென்றும் பிறழக்கூறி இடர்ப்படுவோர் பலர் யானைபார்க்கவும் கண் வெள்ளெழுத்துப்போலும். அவரு டைய அறிவு என்னவாறு! பண்டைக்காலத்தில் அவர் மயங்கி னரென்றால் தற்காலத்திலுள்ள செந்தமிழ்ச் செல்வர்களிலுஞ் சிலர் மொழிச் சரிதத்தில் அவ்விஷயம் மலிந்துகிடந்தும், அங் கைக் கனிபோல் விளங்கிக்கிடந்தும் அறிகின்றிலர்.

தனிமொழி யெனவே தனித்து நிற்கும் மொழியென்றும், எப் பாஷையினுடனும் சேர்க்கப்படுவது முடியாதென்றும் பொருள் படும். ஆகவே தமிழ் மொழியில் மற்றெப்பாஷையி லுங் காணப்பெறாத சில சிறப்பியல்புகள் அமைந்து கிடக்கின் றன வென்பது நாம் அறிகிறோம். உண்மையில் அச் சிறப்பியல் புகள் கிடப்பின், அதைத் தனிமொழியென்றே கூறவேண்டும். அச்சிறப்புகள் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி முத லிய ஐவகையிலக்கணங்களா லாக்கப்பட்ட மொழியின் ஒவ் வொரு உறுப்பிலாவது அல்லது சில உறுப்புகளிலாவது அமைந்து கிடத்தல் வேண்டும்.

எழுத்து வகையில் மற்றப் பாஷைகளில் காணப்பெறாத்

சில எழுத்துகள் தமிழில் காணப்பெற்றுள்ளன. அவை ற, ன, ழ, ஓ, என நான்கு. அவை திரிந்தாவது திரியாமலாவது வேறு பாஷையில் காணப்பெற்றுரில்லை. ற, ன, ழ, என்ற மூன்றெ ழுத்துக்களை வேறு அவ்வவ் வொலியுள்ள எழுத்துக்கள் தமி ழில் உள்ளமையால் அப்பெயர் பெற்ற சிறப் பெழுத்துக்களென கூறுவர் இலக்கண நூலார். தவிர நெடுங் கணக்கில் எல்லா வெழுத்துக்களும் முதலில் கூறப்பட்டு இறுதியில் மூன்று சிறப்பெழுத்துக்களும் வைக்கப்பட்டுள்ளன.

இனிச் சொல்லோ, ஏனைய பாஷையின் தன்மையைப் பெறுவதோடு தனிச்சிறப்புத் தன்மையை தமிழில் உடைத்து. அதாவது சொற்களெல்லாம் ஒட்டுச் சொற்களே. ஒட்டுச் சொல்லென்றுலென்ன வெனின், பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரமென முதலிய ஆறு உறுப்புகளும் ஒன்றேடொன்று ஒட்டி வருமே தவிர திரிந்தாவது கெட்டா வது விகாரப்பட்டாவது வராது; உதாரணமாக, படித்தனன் என்ற சொல்லை யெடுத்தால் 'படி' யென்ற சொல்லடியாகப் பிறந்து இடைநிலையும் சாரியையும் சந்தியும் விகுதியும் சேர்க்கப் பட்டு முடிவுபெற்றது. ஏனைய பாஷைகளிலோ ஒரு சொல்லடி யினிமித்தம் வந்த சொல் உறுப்புக்கள் சேர்க்கப்படுவதற்குப் பதிலாக வேறுசொல்லாகவும், அச் சொல்லினடியாகப் பிறந்த தோ வென்று சந்தேகிக்கும்படிக்கும் வருவதாகும்.

தவிர, சொல்லினுடைய பொருளின் காரணமின்றி முடிவை வைத்து ஆண்பாற் சொல்லென்றும் பெண்பாற் சொல் லென்றும் சொல்லுவர் வடநூலார். ஆனல் தமிழிலோ சொல் லும் பொருளும் ஒன்றை யொன்று தழுவியே நிற்பன. பொரு ளின் காரணமாக இடம், காலம், திணை, பால் முதலிய விகாரங் கள் பிறப்பன.

தவிர தமிழுக்கே உரியதென்றும், ஆசங்கைக் கிடமில்லா மலும், தெளிவாயும் தமிழுக்குச் சிறப்பாயுள்ள தென்று முள்ள ஓரியல்பை நம்பாஷை பெற்றுள்ளது. எல்லாப் பாஷைகளுக் கும் இலக்கணம் நால்வகைத்தே. ஆனால் தமிழ்ப் பாஷை ஐவகை யிலக்கணங்களை யுடையது. தமிழ் தவிர மற்றப் பாஷைகளில், எழுத்து, சொல், யாப்பு, அணி முதலிய நால்வனவாகிய இலக் கணங்களே உள்ளன. ஆனால் தமிழ் பொரு ளிலக்கணமாகிய தனி யிலக்கணத்தைப் பெற்றுள்ளது. அப்பொருளிலக்கணமும் இருவகைத்து. அவையாவன, அகப்பொருளிலக்கணமும், புறப் பொருளிலக்கணமும் அத்தகைய இலக்கணங்களைப் படித்து ஒருவர் ஒரு சிறிது ஆராயின் நந்தமிழ் நாடு உயர் நாகரிகத்தி லிருந்ததென்றும், நம்மக்களின் நாகரிகநிலைமை உன்னதமாயிருந்த தென்றும் அவருக்குக் கண் கூடாகும்.

இதுகாறுங் கூறியவாற்றால் தமிழானது சில சிறப்பெழுத் துக்களை யுடைத்தாய படியாலும், சிறப்பியல்பாகிய ஒட்டுச் சொற்களை யுடையபடியாலும் சிறப் பிலக்கணமாகிய பொரு ளிலக்கணத்தை யுடைய படியாலும், தனிமொழி யென்பதும் வேறு ஒன்றைச்சார்ந்த மொழியல்ல வென்பதும் துனிபாகும்.

பத்திராசிரியர்.

---

## ஆரிய அரசரும் தமிழ் அரசரும்

(20-ம் பக்கத் தொடர்ச்சி.)

"இமைய வரம்பநின் னிகழ்ந்தோ ரல்லர்
அமைகநின் சினமென ஆசானகூற"

என்று ஆசிரியர் கூறுவது ஆராய்வதற்குரியதாகும். தமிழ் அர

சர் மூவரில் வேற்றுமையின்றி ஒத்த உணர்ச்சியுடையனாய் இருந்த சேரனை ஆரிய ஆசான் மற்றைய தமிழ் வேந்தரினின்றும் பிரிக்க எண்ணி இவ்வாறு கூறினான் என்று கொள்வது தவ றாகமாட்டாது. ஆனால் சேரன் ஆசான் சொல்லை புறக்கணித்து நல்ல முழுத்தத்தில் வாளும் குடையும் பெயர்த்து வடநாட்டர சர்மீது போர் செய்யப்புறப்பட்டான். அரசனும் சேனையும் செல்லும் வழியில் நீலகிரிமலையின் அருகே மின்னொளிபோன்ற மேனியொடு சில மாதவர் தோன்றி சேரவீரனைப் பார்த்து,

"செஞ்சடை வானவன் அருளினில்விளங்க
வஞ்சித் தோன்றிய வானவ கேளாய்
மலயத் தேகுதும் வான்பேர் இமய
நிலயத் தேகுதல் நின் கருத் தாகலின்
அருமறை அந்தணர் ஆங்குளர் வாழ்வோர்
பெருநிலமன்ன காத்தல் நின் கடனென்று
ஆங்கவர் வாழ்த்தில் போந்தற் பின்னர்"

என்று ஆசிரியர் கூறுகின்றார். வடநாட்டிலுள்ள ஆரிய அரசர் மீது சீற்றங்கொண்டு செல்கின்ற சேர மன்னவன் இமயமலைச் சாரலில் இருந்து தவம்புரியும் அந்தணரையும் அறியாது அழித் தல் கூடும் அவ்வருமறையாளரை அரசன் அறிந்து காத்தல் வேண்டும் என்று சேரனிடம் சொல்லி வாழ்த்திச் சென்றார்கள். அப்பால் சேரனுடன்கட்பாளராகிய கொங்கணக் கூத்தரும் கொடும் கருநாடரும், குடக வேந்தரும், கன்னர் நூற்றுவரும் தம் தூதுவர் மூலமாய் சேரனுக்குத் திறையளித்தார்கள். இவ் வாறு சேரனிடம் வந்த தூதுவர்களில் கன்னர் நூற்றுவரின் தூதுவனாய் வந்த சஞ்சயன் மொழிகள் இங்கு குறிப்பிடுவதற் குரியனவாகும். சஞ்சயன் செங்குட்டுவன் முன்னால் வந்து,

"வேற்றுமை யின்றி நின்னொடு கலந்த
நூற்றுவர் கன்னருங்கோற் றொழில் வேந்தே
வடதிசை மருங்கின் வானவன் பெயர்வது
கடவுள் எழுதவோர் கற்கேயாயின்
ஓங்கிய இமயத்துக் கற்கால் கொண்டு
வீங்கு நீர்க் கங்கை நீர்ப்படை செய்து
ஆங்கு யாம் தரும் ஆற்றலம் என்றனர்."

என்று கூறினான். அரசே! நீ வடதிசை நோக்கிச் செல்வது கண்ணகிக் கடவுளின் சிலை யமைப்பதற்காக இமயமலையில் ஒரு கல்லெடுத்து வருவதே உன் கருத்தாயின் நீ அதற்காக அவ்வளவு தூரம் அலைந்து வருந்த வேண்டாம். உனது நண்பராய நூற்றுவர்கள் தாமே இமயமலையில் சென்று கல்லெடுத்து கங்கையாற்றில் நீராட்டி உன்னிடம் கொண்டு சேர்ப்பதாகச் சொல் லப்படி என்னைத் தூதாக அனுப்பினர் என்றான். அதைக் கேட்ட செங்குட்டுவன் சஞ்சயனே! கேள்.

"பால குமரன் மக்கள் மற்றவர்
காவா நாவிற் கனகனும் விசயனும்
விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி
அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலர் ஆங்கென
சீற்றங் கொண்டு இச்சேனை செல்வது"

என்று கூறினான். வடநாட்டிற்கு நான் செல்வது கண்ணகி தேவிக்குக் கல்லெடுப்பதற்கு மட்டுமன்று. கனகன் விசயன் என்ற அரசர் இருவர் அருந்தமிழ் ஆற்றல் அறியாது வாயில் வந்தவாறு பிதற்றினர் என்று அவர் செருக்கையடக்கும் பொருட்டு சீற்றங் கொண்டு இச்சேனை செல்கின்றது. ஆகையால் எனது நண்பரான நூற்றுவர்கன்னரிடம் இதனை எடுத்துச் சொல்லி கங்கையாற்றை இச்சேனை கடப்பதற்கு போதிய படகு

கள் சேர்த்து வைக்கச் சொல்வாயாக என்று சஞ்சயனிடம் சொல்லியனுப்பினான். இதனால் செங்குட்டுவன் தமிழரசின் ஆற்றலை ஆரிய அரசர் அறியுமாறு செய்யும் பொருட்டே படையெடுத்துச் சென்றானென்பது தெளிவாக விளங்குகின்றது.

இவ்வாறு சென்ற தமிழ்சேனையை ஆரியசேனை எதிர்த்தது.

"உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன்,
சித்திரன், சிங்கன், தனுத்தரன், சிவேதன்,
வடதிசை மருங்கின் மன்னவரெல்லாம்
தென்தமிழ் ஆற்றல் காண்குதும் யாமெனக்
கலந்தகேண்மையிற் கனக விசயர்
நிலந்திரைத் தானையொடு நிகர்த்துமேல்"

வந்தார்கள். இவ்வாறு ஆரிய மன்னர் பலர் தமிழரசனது ஆற்றலைப் பார்ப்போமென்று கனகவிசயருக்குத் துணையாய்ப் போர்க்களத்திற்கு வந்து தமிழ்ச்சேனையின் முன்னால் பதினெட்டு நாழிகையில் தோற்றுச் சின்னபின்னமாய்ச் சிதைந்து ஓடினார்கள். சடையை வளர்த்த சன்னியாசிகள்போல வேடம் தரித்து விரைந்தோடினர் சிலர். சிவனடியார்கள்போல தூயவெண்ணீரணிந்த மேனியும் தாழ்வடமும் தாங்கித் தப்பியோடினர் சிலர். சமண முனிவர்போல் பீலி கைக்கொண்டு பெரு நோன்பாளர் கோலத்தில் வெளிப்பட்ட கனகனும் விசயனும் சேரன் கைவசப்பட்டார்கள். இவ்வாறு தமிழ்ச்சேனை வெற்றிமாலை சூடியது.

R. P. சேதுப் பிள்ளை, B.A., B.L.

---

# மாதத் திரட்டு



இங்கிலாந்தில் தொழிற்கட்சி ராஜாங்கம் போய்க் கான்சர்வேடிவ் கட்சியார் அதிகாரத்திற்கு வந்திருக்கிறார்கள். மிஸ்டர் பால்டுவின் முதல் மந்திரியாயிருக்கிறார். லார்டு பிர்க்கென்ஹெட் இந்தியா மந்திரியாயிருக்கிறார்.

வங்காளத்தில் ராஜாங்கப் புரட்சி முயற்சியில் சேர்ந்திருந்த அரசாங்கத்தார் சுமார் எழுபத்தைந்து தேசாபிமானிகளை விசாரணையின்றிப் பிடித்து வைத்திருக்கிறார்கள். இதுபற்றி நாட்டில் எல்லாக் கட்சியாரும் அதிகாரிகள் செயலைக்கண்டனம் புரிகிறார்கள்.

* * * *

பம்பாயில் நடந்த ஒற்றுமை மகாநாட்டில் எல்லாக் கட்சியாரும் காங்கிரஸில் ஒன்று சேர்ந்து சுயராஜ்யத்திற்குப் போராடுவதற்குரிய யோசனைகளைக் கூறுமாறு ஒரு பெரிய பஞ்சாயத்தை நியமித்திருக்கிறார்கள்.

* * * *

தமிழர் மகாநாடு திருவண்ணாமலையில் ஈரோடு வெ. ராமசாமி நாயகர் தலைமையில் கூடி முடிந்தது.

* * * *

பெல்காமில் டிஸம்பர்மாத இறுதியில் கூடப்போகிற காங்கிரஸ் மகாநாட்டிற்குத் தலைமை வகிக்க மகாத்மாகாந்தி இசைந்திருக்கிறார்.

* * * *

நாடெங்கும் பேர்பெற்ற தேசபக்தர்களான அலி சகோதரர்களின் அருமைத் தயார் தமது எழுபதாவது வயதில் சில தினங்களுக்கு முன் டில்லியில் காலஞ் சென்றார்.

* * * *

தர்மபுரம் பண்டாரச் சந்நிதியைச் சென்ற வருஷம் கொலை செய்த வழக்கில் குற்றஞ்சாட்டப்பட்ட நால்வரில் இருவருக்குத் தூக்குத் தண்டனை கிடைத்திருக்கிறது. கொலைக்குத் துணைபுரிந்தனரென்று குற்றஞ் சாட்டப்பட்டுள்ள ரத்னசபாபதித் தம்பிரான் முதலியவர்கள் வழக்கு விசாரணையாகப் போகிறது.

* * * *

சூடான் கவர்னர் ஜெனரலையும், எகிப்து ராணுவத்தின்

சர்தாருமாயிருந்த ஸர். லீ. ஸ்டாக் என்பவரை யாரோ கொலையாளிகள் குண்டெறிந்து கொன்று விட்டார்கள். இதற்காக இங்கிலாந்து ராஜாங்கத்துக்கும் எகிப்துக்குச் சில கண்டிப்பான நிபந்தனைகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதனால் ஸகலுல் பாத்ஷா தமது முதன்மந்திரி பதவியை ராஜிநாமா செய்து விட்டார்.

* * * *

தென்னாட்டில் கதர் உற்பத்தியும், கதர் உடுத்துவோரின் தொகையும் வளர்ந்து வருகிறது.

* * * *

படித்தவர்களில் நூல் நூற்போர்களின் தொகையும் பெருகிவருகிறது.

* * * *

அமெரிக்கா ஐக்கிய நாட்டில் சென்ற 1923-ம் வருஷத்தில் சுமார் பதினோராயிரம் பேர்கள் மோட்டார் வண்டிகளால் மாண்டு போனார்கள். மோட்டார் எமன்களை ஒழிக்க வேண்டுமென்று அமெரிக்காவில் ஒரு இயக்கம் தோன்றியிருக்கிறது.

---

## ஆளப்பிறந்தவன் ஆளுவன்

பூர்வகாலத்தில் ஓர் அரசன் இருந்தான். அவன் வயதில் இளையோன், ஆனால் அறிவில் முதியோன். பரந்த நிதியும் உடையான். பல்லோர் புகழும் பெற்றான். ஏனை யரசர்கள் நாடெல்லாம் சண்டையினால் நலங் கெட்டு நிற்க இவன் நாடு ஒன்றே வளம் பெற்று நின்றது.

உண்மையில் உயர் குணமுடையான். கற்றோர்களையும் ஞானிகளையும் கண் எனக்கருதினான். அவர்கள் யாவரையும்

தந்நகருக்கு அன்புடன் அழைத்து வந்தான். அக்காரணம்பற்றி அவன் நகரும் " ஒளிநகர் " எனப் பெயர் பூண்டது.

இவ்வாறிருக்கையில், ஓர் தினம், பெரியோர்களுக்கு விருந்தளித்தான். அப்போது யாவரும் கூடியிருக்கும் சமயம் காவலனின் பார்வை ஒருவர்மேல் சென்றது. அவர் குறுகிய மேனியொடும் தாடியில்லாமலும் தலைமொட்டையாயும் இருந்தார். ஆனால் ஓர்வித ஒளி மாத்திரம் அன்னார் குழிந்த கண்களிலிருந்து தோன்றிக்கொண்டேயிருந்தது. அவர் அச்சபைக்குப் புதியவர். அம்முதியோரைப் பேசக் காண்பது அருமை. ஆதலால் மற்றையோர் அவரைச் சரியான வகையில் மதிக்கவில்லை. அரசன் மாத்திரம், அவர் அடிக்கடி அரசன் வீற்றிருந்த ஆசனத்தை நோக்கிச் செய்த புன்சிரிப்பின் ஆழ்ந்த கருத்தைக் கவனித்து, " இப்புதியோர் என்ன புதிய ஞானம் உடையவராயிருப்பர் ?" என்று தன்னுள்ளே எண்ணினான்.

ஆகவே, விருந்து முடிந்தவுடன் அவரை அழைத்துவரக் கட்டளையிட்டான். அவரும் உடன் வந்து மன்னன் முன் நிற்க, அரசன் அன்புகூறி அமரச் செய்தான். பிறகு அவர் எதில் வல்லமையுடையார் என்பதைத் தெரிவிக்க வேண்டினான்.

அவரும் " ஓ! காவலனே! கோள்களினால் தங்களைப் பற்றி நான் தெரிந்துகொண்ட விஷயங்களைச் சொல்வதற்கு வந்திருக்கிறேன். அவைகளை உற்று நோக்கிய வகையால் தங்களுக்குப் பூலோக வரும் காலம் எவ்வாறென்றும், தங்களுக்குப் பின் அரசன் இன்னவன் என்றும் முன்னறிந்து கொண்டிருக்கிறேன் " என்று விடை தந்தார்.

" சொல்லுங்கள் ! சொல்லுங்கள் ! இவைகளைப்பற்றி தாங்கள் தெரிந்து கொண்டவைகளை அறிவிக்க வேண்டும் " என்று அரசனும் அவனுடன் நின்றான்.

"உம்மோடு உம் வமிசம் முடிந்து விடும், உமக்குப் பின்னுல் தாழ்ந்த பிறப்பாளன் ஒருவன் அரசுக்குரியவனுவான் என்றுர் முதியோர்.

"அப்படியாயின், ஆதாரத்துடன் காண்பிக்கவேண்டும். அப்பொழுதுதான் தங்கள் வார்த்தையில் எனக்கு உறுதி பிறக்கும். அப்படிச் செய்யின் நான் மிகுந்த வெகுமதியைத் தருவதுமன்றி என் அரண்மனைச் சோதிடர்களுக்கும் தலைவனுக்குவேன்" என்றுன் வேந்தன்.

"மன்ன! இங்குள்ளவர்கள் இதை விட்டு விலகட்டும். உலகத்தில் ஒருவர்க்கும் தெரியாதென்று நீர் எண்ணியிருக்கும் இரகசியத்தை வெளியிடுகிறேன். நீர் கூறிய நன்கொடைகள் எனக்கு ஒன்றும் வேண்டாம். இவ் வயல்நாட்டைவிட்டு என் சொந்தநாடு போவது ஒன்றைத்தான் விரும்புகிறேன்" என்றுர் பெரியோர்.

உடனே அரசன் "முதியோரே! சற்று வழிவிடுங்கள். இதோ நிற்கும் முதியோருடன் உய்யான வனதிற் சென்று உலாவி வருகிறேன்" என்று வேண்டித் தன்னிருப்பிடம் விட்டெழுந்து அவருடன் சற்று தூரத்திலிருந்த சிங்காரத் தோட்டத்துட் சென்று பெரியவரைச்சொல்ல வேண்டினுன்

"இற்றைக்கு ஓராண்டிற்கு முன்னர் இந்த இடத்தில் உம் வேலைக்காரன் அருந்துணை நண்பகலில் நின்றுன். தாகமேலிட்டிருந்த சமயம், நஞ்சிட்ட ஒரு கோப்பைச் சாராயத்தை, தாகத்தைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டுக் கொடுத்தீர். உமக்கு அவனிடத்தில் முழு நம்பிக்கை உண்டு. அதனுல் உம்முடைய அந்தரங்கமான விஷயங்கள் பலவற்றைத் தெரிந்திருந்தான். முக்கியமாக, மரணமடைந்த 'மாசில்' பிரபுவைப்பற்றியும்

அவர் மரணத்துக்கு நீர் ஏதுவாயிருந்த கதையையும் அவன் அறிவான்" என்று அத்தவசி கூறினர்.

"இதைக்கேட்டதும் மனமுடைந்து, என்னுடைய தூண்டு கோலால் அம்மரணம் ஏற்பட்டதென்று அறிந்து கொண்டிருக்கின்றீர்! "உதவி! உதவி! இதோ இருக்கின்ற மந்திரவாதி என்னைக் கொன்றுவிடுவான்" என்று உரக்கக் கூவினல் உடனே இருபது வீரர்கள் ஓடிவந்து உம்மை யமனுக்கு விருந்தளிப்பார்கள் என்று அறியும்" என்ருன் அரசன்.

"அன்று! அன்று! மரணத்தைக் காட்டி என்னை மருட்ட வேண்டாம். எனக்கு இன்னல் இறப்பு அன்று. நீண்ட ஆயுளையுடையவன் யான். உம் விஷயம் எனக்குத் தெரிந்திருப்பதால் உமக்கு யாதேனும் அபாயம் என்று எண்ணவேண்டாம்.

"அதோ காண்கிற மங்கல் நிறக் கோபுரம் என்னிருப்பிடம். அங்கே வசிக்கும் சிறுபான்மையோர் தம் பெயர் ஒன்றன்றி வேறென்றும் அறியார்கள்" என்று அவ்விருடி மறுமொழி பகன்ருர்.

கூறியதும், தவயோகி அவ்விடம் விட்டு நீங்கி அரண்மனை வெளிப் போந்து, யாவருடைய சொல்லையும் செவிக் கொளாமல், நகரின் தெருக்கள் யாவும் கடந்து மலையடர்ந்த தன்னிருப்பிடம் விரைவிற் சென்ருர். அரசனும் தன்னிடம் அடைந்தானே யாயினும், மிக்க கவலையுண்டு ஒளியிழந்த முகத்துடனிருந்தான்

ஆயினும், நாளடைவில் அப்புன் செய்கையை மறந்தான். மறுபடியும் தன் செல்வப் பெருக்கினுலும், உயர் பதவியினுலும் இன்பம் பெற்ருன். அதுவன்றியும் நன்னலம் பூண்ட அரசன் புதல்வி ஒருத்தியை மணம் புரிந்து பெருநிதியும் அதனுற் பெற அடங்கா மகிழ்ச்சியில் மூழ்கினுன்.

2. வேட்டை.

அடுத்த கோடை இறுதியில், பரிவாரங்கள் புடை சூழ காட்டில் மான் கரடி வேட்டையாடி நின்றான். வேட்டையும் இராஜ வேட்டைதான். நண்பகல் கடந்து நீண்டு நின்றது. வேட்டை துவக்கியது முதற் கொண்டு காணாத ஒரு அழகிய மானை அரசனும் அவன் பரிவாரமும் கண்டார்கள். கண்டதும் "இரவு ஆகினும் இதனை விடாதீர்கள்" என்று பெருங் கூரலிட்டு அரசன் தன் புரவியைக் கடுமையாய்ச் செலுத்திப் பின் சென்றான். M. சோமசுந்தரம் பிள்ளை, B.A., L.T.

(தொடரும்)

---

பழந்தமிழ்ப் பெருமக்கள் வரலாறு-2.

## அரசியற் புலவர்—கோவூர் கிழார்.

---

I



"கற்கக் கசடறக் கற்க கற்றபின்
நிற்க அதற்குத் தக" வென்பது முதுமொழி.

கல்வியைக் கற்றால் அது நல்ல காரியங்களைச் செய்யத் தூண்ட, அதனாலே அறத்தையும், அத்தருமம் காரணமாகச் செழித்தோங்கும் பொருளையும், அதை அனுபவித்தலாலுண்டாகும் இன்பத்தையும், இவ்வின்ப நுகர்ச்சியிலுண்டான அருவெறுப்பால் மோட்சத்தையும் அடையச்செய்யும். 'அறம் பொருள், இன்பம், வீடடைதல் நூற்பயனே' என்று பெரியோர் கூறியுளர். ஒருவன் தான் தீயவழியில் ஈட்டிய

பொருள் நல்லோனுயுள்ள ஒருவனிடத்துச் சேருமாயின், அப்பொருளுள்ளளவும் அந்நல்லோனையும் தீயவழியிற்றூண்டுமென்பது பெரியார் துணிவு. அதுகொண்டுதான் கற்பதைக் கசடறக் கற்கவேண்டும்; கற்றபின் தாங்கற்றுக் கேட்டதற்கிணங்க நடத்தல் வேண்டுமென்று கடைப்பிடித்து நடப்பவரே பெரியோரென்று கூறப்படுகின்றனர். அவரே கல்வி, கேள்வி நிறைந்த மாண்பினோராவர். அவ்வாறு ஒழுங்குபெறக் கற்றவர் களையே நற்றுணையாகக்கொண்டு அரசு தனது செங்கோலைச் செலுத்த வேண்டுமென விதிக்கப்பட்டிருக்கிறது.

"படைகுடி கூழமைச்சு நட்பாணாறு
முடையானரசருளேறு"

என்று காணப்படினும் அறச்செயலின்றி மறச்செயலை (பாவச் செய்கை) யுடைய படைகுடிகளை யுடையான் எங்ஙனம் செங்கோலோச்சவியலும்? அவனுடைய அரசாட்சி தன்னளியுடையதாகாதன்றோ? அமைச்சர் நல்லோராயிருந்தால் அவ்வாறு நடவாதோவெனின், நல்லமைச்சனுயினும் ராஜ்ய தந்திரம் என்னும் அரசியலை யுத்தேசித்து, அவன் தன்னுடைய வரசன் நீதியினின்றும் வழுவிய காலத்து இடித்துரைக்கும் ஆற்றலுடையவனுயிரான். வெங்கலியின் அழுக்காறு காரணமாகச் சூது பொர நினைந்த நளனை யிடித்துரைத்து நல்வழிப்படுத்தும் வல்லமையுடைய அமைச்சு இல்லாமையானன்றோ, நளன் காட்டிற்றிரிந்தும், மடைத்தொழிற் செய்தும் துன்பப்பட்டான். நல்லுரை கூறி விலக்கமாட்டாமையானன்றோ அறன்மைந்தன் (தருமபுத்திரன்) நாடிழந்து காட்டிலுழன்றனன். இவ்வாறு தீயவழியிற் செல்லுங்கால், அரசனுயினும், அடியவனுயினுமென்; மேலோனுயினும் கீழோ

னுயினும் எவனுயினும் கொஞ்சமும் கண்ணேட்ட மின்றிப் புண்ணிற் கருவியிட்டாட்டும் மருத்துவனே யொப்ப அவா வருக்கு அத்தீய செய்கைகளாலுண்டாகும் துன்பங்களை யெடுத்துக்காட்டி இடித்துரைக்கவல்லார் நல்லிசைப் புலமைவாய்ந்த கல்விவல்லாரே யாவர். அவர்கள் தலைப்பிற் கூறியாங்குத் தாங் கற்ற கல்விக்குத் தகநிற்கும் ஆற்றலுடையார். அவ்வாறு பிறனையும் தன்வயப்படுத்தும் வன்மையுடையவர், தம்பொருட்டு வேற்று நாடு வந்த புலவனை யநியாயமாகச் சிறையிட்ட சோழனிடத்துக் கோபித்துக் கதவடைத்த இராக்கினி (இராணி) யின் சினந்தணியச் செய்து புகழைத் தாங்கியவன்றுனென உலகிற்குக் காட்டியவனும் புலவனன்றே? தன்வயப்பட்ட அரசினை நடாத்தியவனும் ஒரு பெரும் புலவனுவான். இதனுற்றுன் அரசர் புலவராற் சூழப்பட்டிருத்தல் இன்றியமையாததென முன்னேர் விதித்திருக்கின்றனர்.

ஆயினும் தீயவழியிற் செல்லும் அரசர்களை நல்லாற்றுப் படுத்தக் கூடியவர் ஒரு சிலரே யாவார். முன்னுளில் இவர்களுள் தலைமை வாய்ந்து விளங்கியவர் கோவூர் கிழார் என்னும் பெரும் புலவராவார். இவரைப்பற்றிய வரலாறும், இவரது அருஞ் செய்கைகளும், கல்வியின்றிறனும் கிடைக்குஞ் சாதனங்கள் கொண்டு ஒருவாறு எழுதப்படும்.

தலை, இடை, கடை என்று மூன்று சங்கங்கள் இருந்தன என்று எல்லோரும் அறிவர். நமது புலவர் தலைவர் அவற்றில் கடைச் சங்கத்திலே வாழ்ந்தவராவார். புகார் என்னும் பெயருடைய காவிரிப்பூம் பட்டினத்தை வளம்படுத்தி இமயமலைவரைத் தன்னுணை செலுத்தி அரசாண்டனன் சோழர் பெருந்தகையான கரிகாற் பெருவளத்தான் என்னும் மன்னன். இவனது காலம் முதலாம் நூற்றுண்டென்பர் சரித்திர ஆசிரியர். அக்காலத்தில்,

புகார் பெருந் துறைமுகமாயிருந்தது. உரோமயவன தேயத்தின ரால் முதன் முதல் கீழ் நாட்டுக் கடற் பிரயாணஞ்செய்து குறிப்பெழுதி எவரும்பேரும் இன்றி வெளியிட்ட பேரிபிளஸ் (Peryplus) என்னு நூலில் பின்வருமாறு காணப்படுகிறது:

"குமரியினின்றும் தென்புறமாக முத்துச் சலாபங் குளிக் குங் கொற்கைக்குக் கப்பல் செல்லுகிறது. அது பாண்டிய அர சாட்சிக்குட்பட்டது. கொற்கைக்கப்பால் கடலகம் என்று சொல்லப்படும் தேயமுளது. இது கடலுள் வளைகுடாவிலிருப் பதுடன் உள்நாட்டில் உறையூர் என்ற நாட்டினையு முடையது. இங்கேதான் இப்பக்கங்களிலுண்டாகும் முத்துகளைப் பெறலாம். இங்கிருந்தே அர்காடிக் (Argaratic)* என்ற நேர்த்தியான மஸ் லின் ஏற்றுமதியாகிறது."

"இங்காடுகளில் தமிழகத்தினின்றும், வடநாட்டினின்றும் பண்டநிறைந்த மரக்கலங்கள் தங்கக்கூடிய சாலைகள் (Harbours) அமைந்த பட்டினங்கள் அநேகமுண்டு. அவற்றுள் மிக முக்கிய மானவை, வரிசையாகச் சொல்லுமிடத்து, காவிரிப்பூம் பட்டி னம், போதுகை, சுபத்மா † முதலியன விருக்கின்றன. இப்பட்டினங்களில் கடலோரமாகவே சென்று வாணிகஞ் செய் யும் நாவாய்களும், சங்காரவென்ற பெருமரக்கலங்களும், கங் கைக் கரை, கிரிஸேவரையிற் செல்லுங் கோலந்தியா வென்ற மரக்கலங்களுமுண்டு. இங்காங்களில் தமிழகத்திற் கிடைக்கக் கூடிய நால்வகைப் பொருள்களும், எகிப்திலுண்டாகும பொருள் களிற் பலவும் கொண்டு வந்து விற்கப்படுகின்றன."

---

* கொரநாட்டுச் சேலை என்பது போன்றும், துயிலி உடை யென்பது போன்றும் நேர்த்தியான உடைகள் அந்நாளில் இங்கி ருந்து எகிப்து, ரோமபுரி முதலான தேசங்கட்குச் சென்றன வென்றும், இந்நாட்டிலிருந்தே சரிகை வேலை செய்த உடைகள் சென்றன வெனறும் அமெரிக்கா அறிஞர் ஸ்காப் (Schoff) கூறு வர்.

† இக்காலத்தில் இப்பட்டினங்களை அடையாளங் காண்பதற் கில்லை.

இலக்கண விளக்க பரம்பரை சோமசுந்தர தேசிகர்.

(தொடரும்)

# திருவள்ளுவர் நூல் நயம்.

(ஆசிரியர்: ஆர். பி. சேதுப்பிள்ளை, பி.ஏ., பி.எல்.,)

## விலை ரூபா 1.

# சில மதிப்புரைகள்

1. செந்தமிழ்:—திருவள்ளுவர் நூல்நயம். இது, ஸ்ரீமான் ஆர். பி. சேதுப் பிள்ளை (பி.ஏ., பி.எல்.) அவர்களால், திருக்குறளைப்பற்றிய நவலும் பொருள் பலவும் தெளிவாய் விளங்கும்படி ஆராய்ச்சி முறையான இனிய வுரை நடையி லெழுதப்பட்டிருக்கிறது. இதனை யெழுதிய பிள்ளையவர்களது தமிழ்மொழி வன்மையும், களவியலுரை முதலிய தமிழ்நூற் பயிற்சியும் பாராட்டற்பாலன. இப்புத்தகத்தைப் பற்றிச் சொல்லத்தக்க சிறந்தன பலவும் ஸ்ரீமான் கா. சுப்பிரமணியபிள்ளை (எம்.ஏ., எம்.எல்.) அவர்கள் எழுதிய உயர்ந்த முகவுரையானே நன்கு விளங்கும். இவ்வாறான ஆராய்ச்சிகளே விரைவாகத் தமிழ் கற்பவர்களுக்கு மிகவும் பயன்படத்தக்கன. இக்காலத்தியல்புபற்றி, நூலுள்ளும், உரையுள்ளும் இடையிடையே நுழைக்கப்பட்டிருக்கும் சில புதியகருத்துக்கள் ஆராயத்தக்கன.

2. செந்தமிழ்ச் செல்வி:—திருவள்ளுவர் நூல் நயம் என்னும் ஓர் அரிய ஆராய்ச்சி நூல் எமது பார்வைக்கு எட்டியது. அது ஸ்ரீமான் R. P. சேதுப்பிள்ளை B.A.,B.L., அவர்களால் எழுதப்பட்டது. அதற்கு ஸ்ரீமான் கா. சுப்பிரமணிய பிள்ளை M.A.,M.L., அவர்கள் ஒரு முகவுரை வரைந்துள்ளார்கள். ஸ்ரீமான் M. E. வீரபாகு பிள்ளை அவர்களால் அஃது அச்சிடப்பட்டுளது. ஆராய்ச்சி நூல்கள் பலப்பலவாக வெளிவரவேண்டுமென்பது எமது வேணவா. திருக்குறளுக்கு எத்தனையோ பல ஆராய்ச்சிகள் வெளிவர இயலும். நம் நண்பர் திருவாளர் சேதுப் பிள்ளை அவர்கள் தமிழ்ப் பற்று மீக்கொண்டு இந்நூலை எழுத முற்போந்தது தமிழர் யாவரும் உவகை கூறற்பாலது. பிள்ளை அவர்கள் இருமொழிப் புலமையும் பெற்றிருப்பது அத்தகைய ஆராய்ச்சி எழுதுதற்குப் பெருந்துணையாகும் என்பது சொல்லாமலே அமையும். பிள்ளையவர்கள் மேனாட்டு ஆராய்ச்சி முறையைப் பின்பற்றிப் பொருட்பாடு செய்து கொண்டு திருவள்ளுவர் பெருமையை விளக்கு முகத்தான் பல நுண் பொருள்களை எடுத்துக் காட்டியுள்ளார். திருவள்ளுவர் வரலாறு திருவள்ளுவமாலையைப் பெரிதும் தழுவி எழுதப்பட்டுளது. வள்ளுவனார் முப்பாலின் அமைதியும் அவற்றின் திட்பநுட்பங்களும் இதன்கண் செவ்விதின் விளக்கப்பட்டுளது. பிள்ளையவர்கள் பரிமேலழகர் உரையினைப் பாராட்ட வேண்டிய இடத்துப் பாராட்

டியும் அவர் வழுவிய இடங்களை எடுத்துக் காட்டியும் இருக்கின்றனர். இந்நூலின் நடை மிக்க இனிதாக இயன்றுளது. தமிழ் மக்கள் இதனை வாங்கிப் படித்து நண்பர் அவர்கள் இத்தகைய திருப்பணியைத் தமிழுக் காற்றுமாறு ஊக்குவார்களாக.

3. நவசக்தி:--தமிழ்மறையெனப் போற்றப்படும் திருவள்ளுவர் திருக்குறளைப் பாவடிவில் ஒருசிலரே படித்தறிந்துகொள்ளக்கூடும் பெரும்பான்மையோர், அச்சிரிய நூலில் பொதிந்துகிடக்கும் உண்மைகளை அறிந்துகொள்ள அவாக் கொள்கின்றனரேனும் அவைகளைப் படித்துப் பயன் பெற முடியாதவராகி விடுகிறார். அவர்க்கு, இந்நூல் பெருந்துணை செய்வதாகும். இந்நூலாசியர் எளிய இனிய வசன நடையில் நூற்கருத்தை ஆராய்ச்சி முறையில் விளக்கிக் கொண்டு செல்லும் பான்மை பெரிதும் போற்றத்தக்கது. ஸ்ரீமான் சேதுப்பிள்ளை அவர்கள் தமிழ்ப் புலமையும் ஆங்கில அறிவும் பெற்றவராதலின் ஆங்கில நூலாசிரியர்கள், அரிய காவியங்களுக்கு வியாக்கியானம் செய்து கொண்டு போகும் முறையில் இந்நூலை யாத்திருப்பது பாராட்டத் தக்கது. இந்நூலைப்படிக்கும் ஒவ்வொருவருக்கும், திருக்குறளைப் பாவடிவில் படிக்கவேண்டும் என்ற எண்ணம் உதியாமலிராது. இதனைத் தமிழ்நாட்டார் பொன்னே போல்போற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

4. ராமகிருஷ்ண விஜயம்:—இது ஸ்ரீமான் ஆர். பி. சேதுப்பிள்ளை பி.ஏ., பி.எல்., இயற்றியது. ஸ்ரீமான் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் எம். ஏ., எம். எல்., எழுதிய முன்னுரையோடு கூடியது. இஃது ஒரு அரிய ஆராய்ச்சி நூல்; ஆசிரியர் பெருமை, நூன்மரபு, அறத்திறன், அரசியல், இன்பவியல், உவமங்கோடல், உரையாராய்ச்சி யென எழு பிரிவுகளாக நின்று திருவள்ளுவர் நூல் நயத்தை அறிவின் முதிர்ந்தோர் இளையோர் ஆகிய இருபாலரும் படித்தின்புறுமாறு செவ்விதினுரைப்பது. உரையாராய்ச்சியினுள் ஏழாம் அதிகாரத்துத் தலைப்பெயர் "புதல்வரைப் பெறுதல்" என்றிருத்தலினும் பார்க்க "மக்கட்பேறு" என்றிருத்தலே சிறப்பாமெனக் காட்டப்பட்டிருக்கிறது. சிவப்பிரகாச சுவாமிகளும், அரசஞ்சண்முகனாரும் உரையாசிரியர் சிலரும் கொண்ட கருத்தும் இதுவேயாம். இந்நூல் திருக்குறள் கற்போரனைவருக்கும் பெரிதும் பயன்தருமியல்பினது என்பதற்கையமில்லை. விலை ரூபா 1.

கே. பழனியாண்டி பிள்ளை கம்பெனி,
திருவல்லிக்கேணி, சென்னை.

'ஒற்றுமை' ஆபீஸ்,
சைதாப்பேட்டை, மதராஸ்.

# காட்சி

பூர்வீக மக்கள் உயர்ந்த தோரிடமாகிய மலையிலிருந்து கொண்டு முதல் முதல் கண்ட ஒளிர் பொருள்களாகிய சூரியனும் மூங்கிலு மென்னும் இரண்டனுள் சூரியன் விண்ணில் ஒளி முதற் பொருளும், மூங்கில் மண்ணில் ஒளிமுதற் பொருளும் ஆதலால் அச்சிறப்புப் பற்றி அவற்றை அடிக்கடி கவனித்துக் கொண்டு வந்தார்கள். கவனிக்கவே சூரியனிடத்தில் திரட்சி, வெம்மை, நிறம், அழகு முதலிய குணங்களிருப்பதையும், முதிர்ந்த மூங்கிலில் இயல்பாக நெருப்புண்டாவதையும், அதனுல் ஒளி உண்டாவதையும், அந்நெருப்பு சிவந்திருப்பதையும் அதில் புகையுண்டாவதையும் பொறிகள் பறப்பதையும் பிறகு சாம்பலாவதையும் கண்டார்கள், மூங்கிலில் கணுக்களிருப்பதையும் அக்கணுக்கள் பிரிந்து பிரிந்திருப்பதையும் கணுக்களின் பொருத்து உறுதி கொண்டிருப்பதையும் கண்டார்கள். பிறகு கணுக்களிலிருந்து வேரிறங்குவதையும் வேரின் பின் முளை உண்டாவதையும் வேர் கீழ் நோக்குவதையும் முளை மேனோக்குவதையும் முளையினின்று வளர்ச்சி உண்டாவதையும் அதுவே போத்தாதலையும் அப்போத்து ஒழுங்கு பெற்றிருப்பதையும் கண்டார்கள்.

பிறகு வேர் முற்பட்டதென்பதையும் அதுவே வளர்ச்சி முதலியவற்றுக்குக் காரணமென்பதையும் அம்முளை வெண்மையும் கூர்மையும் சிறுமையுமாக இருப்பதையும் கண்டார்கள்.

பிறகு மூங்கில் நீண்டிருப்பதையும் பசுமை கொண்டிருப்பதையும் அசைந்துகொண் டிருப்பதையும் உட்டுளை பெற்றிருப்பதையும் கண்டார்கள்.

---

பிறகு முதிர்ந்த மூங்கிலில் நெல்லிருப்பதையும், அது அரிசியாவதையும், அதை எறும்பு முதலியன தின்பதையும் கண்டார்கள்.

பிறகு மூங்கிலில் நெடுக்கு நரம்பிருப்பதையும் அது போல் நெடுக்கு நரம்புடைய கரும்பு, தென்னை, பனை, கமுகு, நெல், கம்பு, சோளம், தினை, புல், கொறுக்கை, நாணல், கேழ் வரகு, சாமை, முதலியன வெல்லாம் மூங்கிலினங்களென்பதையும் கண்டார்கள்.

பிறகு மூங்கிலில் 100 கணுக்களிருப்பதையும் ஓர் கணு முதல் மற்றோர் கணுவரையும் தம் விரலால் 10 அங்குல மென்பதையும், 100 கணுக்களுக்கும் 1000 அங்குல மென்பதையும் ஒவ்வோர் கணுக்களிலும் மூன்று கணுக்களிலிருப்பதையும், 100 கணுக்களுக்கும் 300 அங்குல மென்பதையும் கண்டார்கள்.

பிறகு மூங்கில்போல் பசுமைகொண்ட தமால மென்னும் மரங்களையும் அவை மணம்வீசுவதையும் தமாலம்போல் மணம் வீசும் பொருள்களையும் கண்டார்கள்.

பிறகு யானையையும் அது கரு நிறங்கொண்டிருப்பதையும் அதன் தும்பிக்கையையும் அதிலுட்டுளை யிருப்பதையும் அது மெல்ல அசைந்து கொண்டிருப்பதையும் கண்டார்கள்.

இங்ஙனமே கடல் முதலிய எல்லா இயற்கைப் பொருள்களையும் அவ்வவற்றின் குணங்களையும் கண்டார்கள்.

* மாகறல் கார்த்திகேய முதலியார்.

---

* மேற்படியார் எழுதிய மொழி நூல். விலை ரூ. 2-8-0.
நாலடியார் அரும்பொருள் விளக்கத்துடன் ரூ. 1

## வாலிபர் கிளர்ச்சி

## THE YOUTH MOVEMENT

மனிதனுடைய வாழ்நாளில் மிகமேலானதும், அளவிறந்த மகிழ்ச்சியை உண்டுபண்ணக் கூடியதுமான காலம் வாலிபப் பருவம் ஒன்றேயாம். இயற்கையாக இப்பூவுலகத்திற் பிறக்கும் ஒவ்வொருவரும் கொண்டு செல்கின்ற ஒருவகைச் சக்தியே அவ்வித மகிமைக்குக் காரணம். வாலிபப்பருவத்தில் இச்சக்தியானது பல்வேறு வகைப்பட்ட உலக சக்திகளின் சேர்க்கையில்லாமல் தனியே நின்று ஒளிர்கின்றது. இச்சக்தியின் பயனாகப் பெரிய நினைவுகளையும், அந்நினைவுகளால் உண்டாகக் கூடிய பொருள்களையும், முறையே இடைவிடாது நினைத்தலிலும், அடைய முயற்சித்தலிலும் வாலிபர் கண்ணுங் கருத்துமாய் இருக்கின்றார். அவர்கள் தாம் சரியெனத் தொடங்கிய வேலையை முடிக்குமட்டும் நித்திரையையும் பாராராய், துன்பத்தையும் நோக்காராய், இளைப்பும் தெரியாராய் சந்தோஷமே உருவெடுத்து வந்தாற்போலிருந்து, செய்வார்.

வாலிபரிடத்துள்ள ஆண்மைத்தனத்தின் அளவிறந்த வலிமையையும், அதைப் பக்குவமாய்ப் பரிபாலித்து வருங்கால், ஓங்கி வளர்ந்து உதவும் பேறுகளின் மேன்மையையும் நன்கு அறியாராய், நம் முன்னோர் வாலிபருக்கு நன்மை செய்வான் கருதித் தீமை புரிவாராயினர். பிள்ளைகளின் உன்னத மனநிலைகளை அறியாத பிதா மாதாக்கள், தம் பிள்ளைகளைத் தந்தம் மனோசக்கரங்களுக் கிடையில் நிறுத்துதலே தாங்கள் அவர்களுக்குச்

செய்யும் பெருங் கடமை என்று உன்னி, தம்மெண்ணம் கை கூடுமளவும் வேண்டியன வெல்லாம் செய்தார். பிரபஞ்சத்தில் மலிந்து கிடக்கும் மாயா சக்திகளால் மோதப்பட்டு, அதன் பய னாக ஆண்மைத்தனம் சற்றுமின்றி அழிந்தும், மானதக் காட்சி கள் முற்றாக நீங்கியும், இருக்கின்ற முதிர்ந்தோர் இருதயமானது, பொள்ளெனத் தளிர்த்துப் புதிதாக அரும்பும் வாலிபத்துவத்தின் வளத்தையும் மகிமையையும் ஆதரியாமல் இருந்தது.

வாலிபர் ஆண்மை மிகவலியுடையதாதலின் அதை அடக் குங்கால் முன்னோர்கள் பல்வேறு வகைகளைக் கைகொண்டார் கள். பிள்ளைகளைத் தூண்களிற் கட்டி இளைப்புத் தோன்றுமள வும் பிரம்பினால் அடிப்பார்கள். அடிதாங்க இயலாமல் கதறுவா ராயின், அதனோடு ஒழியாது பின்னும் அடிப்பார். மிளகாய் முதலிய காரங்களைக் கைகூசாமற் கண்களிற் பூசி வருத்துவார். அதுமட்டோ முற்காலத்து உபாத்தியாயர்கள், "கோதண்டம்" "நெற்றிக்கல்" முதலிய கொடிய தண்டனைகளைச் சற்றுந்தயை யில்லாமல் அடிக்கடி கையாண்டு வந்தார்கள். அக்காலத்தில் இள மைப் பருவத்தைக் கெடுக்க மேற் கூறிய வலிய வழிகளை அநு சரித்தார்களாயின் அப்பருவம் எவ்வளவோ மேன்மை உடையது என விளங்குகின்றது.

மேலும் வாலிப இலக்ஷணங்களும் மாறாகவே யிருந்தன. பெரிய உண்மைகளைச் சொல்லளவிற் கேட்டுச் செய்கையளவில் விலகியிருப்பதும், அஞ்ஞானமாயினும் பழையனவற்றை இடை விடாது போற்றலும், ஞானமாயினும் புதியனவற்றை ஏற்றலில் ஏமாந்து நிற்றலும், உலகெலாம் ஒளிரும் உன்னத உண்மை களுக்காக உயிரிழப்பதே மேன்மையென்று கருதாமல், பொய்

தமிழ்மொழி வரலாறு ரூ. 1 [சூரிய நாராயண சாஸ்திரி].

யுக்கும் அஞ்ஞானத்திற்கும் அடிமைகளாகிக் கால நோத்திற்கு எது தகுமோ அதைச் செய்து காலங் கழித்தலும், ஆகிய இன்னோன்ன குணாதிசயங்களை உடையவரே, நற்குணமுள்ளவன், குலரத்தினன், புத்திமான் எனப் பெரும்பான்மையோரால் போற்றப்பட்டு, வந்தனர்.

சம்சாரம் என்னும் சமுத்திரத்தின் அலைகளுக்கிடையில் மோதப்படாமல், தப்பித் தமது கடமைகளை நிறைவேற்றிய பெரியோர்கள் உலகத்தில் விளங்கும் உண்மைகளை உரைத்தது மல்லாமல் தாம் கூறியபடியே தம் செய்கைகளிலும் காட்டினார்கள்.

சில காலமாக வாலிபருக்கும் முதியோருக்கும் இடையில் தங்கள் தங்கள் உரிமைகளைப் பெறுதற்கண் பற்பல சண்டைகள் நடந்தன. தொடக்கத்தில் வாலிபர்கள் ஓரளவுக்குத் தோற்கடிக்கப்பட்டாலும் இப்பொழுது இடையிடையே வெற்றி அடைந்து வருகின்றனர். வாலிப இயக்கம் என்னும் ஒளியானது தனிமையாய் அங்குமிங்கும் பிரகாசிக்கின்றது. சிறிது காலத்தில் ஒளிகள் எல்லாம் ஒன்று திரண்டு பற்பலவிடங்களில் இருக்கும் இருட்சக்திகளை ஒழிக்கும் என்பதிலோர் ஐயமும் இல்லை.

வாலிப இயக்கம் முன்னேங்கி வளரும்பொழுது அதை மேன்மேலும் ஓங்கி வளரச்செய்தோர் பலராவர். அவர்கள் எல்லாருள்ளும் பிரசித்திபெற்றவர் யாவரோவெனின் சுய பாஷையிலும் பிறபாஷைகளிலும் சரிவரப்பாண்டித்தியம் பெற்றவரும் பற்பல சாதியாரின் நாகரிகங்களின் சமரசத்துக்காக உழைத்து வருபவரும் புலவ சிகாமணிகளுக்கெல்லாம் தலைமை வகிப்போரும், விஸ்வபாரதியென்னும் சர்வகலாசாலை ஸ்தாபித்து அழியாப் புகழ் பெற்றோரும் ஆகிய ரவீந்திரநாத்தாகூர் என்பார்.

---

தற்காலத்தில் வழங்கும் கல்வி முறைகள் வாலிபர் விருத்திக்குக் கெடுதி விளைவிப்பதை அறிந்து அதை ஓங்கச் செய்யும் நோக்கமே பெரிதாய் உன்னி அவர் நடாத்தி வருகின்றார். பற்பல குடும்பங்களில் துட்டர்கள் என்று வெறுக்கப்பட்டவர்கள் விஸ்வபாரதியில் சிலகாலம் படித்துப் பின் தம் வீடுகள் சேர்ந்த பின் பெருங்குணங்கள் பல அமைந்தவர்களாகக் காணப்படுகிறார்கள்.

வாலிபக் கிளர்ச்சிக்குக் காரணராய் உள்ளோரில் (Dr. Beasant, Dr. Arundale, Mr. F. G. Pearce) Dr. பெசென்ட், Dr. அருண்டேல், F. G. பீயேஸ் முதலியோர்கள் இங்கு யாமெடுத்துக் கூறத் தகுந்தவர்கள். இவர்கள், பத்திரிகை வாயிலாகவும், பிரசங்கவாயிலானும், பற்பல விடங்களில் வாலிபச் சபைகள் கூட்டியும், வாலிபக் கிளர்ச்சிக்குப் பெரிதும் உதவி புரிந்தும் வருகின்றனர். இவர்களுக்கு வாலிபர்கள் என்றும் கடமைப் பட்டவர்களாய் இருக்கவேண்டும்.

உலகத்தில் பற்பல விடங்களிலும் வரவரக் கிளர்ச்சி அதிகப்படுகின்றது. சில மாதங்களுக்கு முன் அமெரிக்க வாலிபர் தாங்கள் அடைந்த முன்னேற்றத்தை உலகத்தாருக்குக் காட்டுமாறு "வாலிபர் வாரம்" ஒன்று ஏற்படுத்தி அவ்வாரத்தில் பலசிறப்பட்ட விஷயங்களை நடாத்தினார்கள். சென்னை வாலிபர்கள் இம்மாசம் தங்கள் திறமைகளைக் காட்டுவதற்காக முயற்சி செய்கிறார்கள். அவர்களுடைய கூட்ட நடவடிக்கைகளில் இருந்து தென்னிந்திய வாலிபரின் முன்னேற்ற நிலையை அறியத்தக்கதாக விருக்கும்.

இன்னும் சிறிது காலத்தில் இவ்வுலகம் வாலிபர் உலகமாக

மாறும். அக்காலத்தில் அவர்களே உலகப் பொறுப்புக்களைத் தாங்குவோராவார். அதன் பயனாக இவ்வுலகத்துள்ள பொருள்கள், சமயங்கள், சாஸ்திரங்கள், கோயில்கள், மாட மாளிகைகள் முதலியன வெல்லாம் அவர்கள் பரிபாலனத்தைப் பெறும். இப் பொறுப்புக்களைச் செவ்வனே நடாத்தி, தாம் பொறுப்பை ஏற்கு முன் அவை இருந்த நிலையிலும் பார்க்கப் பன்மடங்கு மேலோங்கச் செய்தல் வாலிபரது இன்றியமையாக் கடமையாகும்.

——— கு. முத்துக்குமாரசுவாமி.

## புஸி புட் ஜான்ஸன்
## PUSSY FOOT JOHNSON.

வில்லியம் ஈகின் ஜான்ஸன் நியூயார்க்கைச் சேர்ந்த கவன்ட்றி என்னுமிடத்தில், 1862-ம் வருடம் மார்ச்சு மாதம் 25-ந்தேதி பிறந்தார். அவரது தந்தை "உழுதுண்டு வாழ்வதற்கொப்பில்லை" என்பதற்கு இணங்க, கிருஷித் தொழிலை முதன்மையாகக் கொண்டு இல்லறம் நடாத்தி வந்தார். இவரது குடும்பம் இங்கிலாந்திலிருந்து அமெரிக்காவுக்குக் குடியேறியவைகளி லொன்று. ஜான்ஸனது பாட்டியாரை பால்மர் எனுமோர் டாக்டர் மணந்திருந்தார். இவர் நீக்ரோ ஜாதிக்காரரது அடிமைத்தனத்தை ஒழிக்கும்பொருட்டு தன்னாலியன்றமட்டும் உதவி புரிந்துள்ளார். பால்மரால் போற்றப்பட்டு வந்த ஓர் நீக்ரோவை தனது குருவாய் நியமித்து ஜான்ஸன் கல்வி கற்று வந்தார். ஆனால் அவரது இளமைக் கல்வி தாயாரால் போதிக்கப்பட்டு வந்தது.

---

கல்வி முடிந்ததும் ஓர் உபாத்தியாயர் வேலையிலமர்ந்து பெரும்புகழைத் தேடிக்கொண்டார். பின்பு நெப்ருஸ்கா நியூஸ் பிரேவில் மானேஜர் ஸ்தானம் வகித்து, தனது ஆயுளை உலக நன்மைக்காக ஈடுபடுத்தவேண்டு மென்று திட்டம் செய்து கொண்டார். தனக்கு மனைவியாக, லிங்கன் நகரிலுள்ள மிஸ் லிலி எம். ட்ரிபிட் எனும் ஓர் அழகிய மாதை மணமுடித்தார். இவ்வம்மையார் அவரது முயற்சிகளில் மிகவும் உதவி புரிந்து வந்தாள்.

தனது குடும்பத்தாரில் ஒருவர் மதுபானத்தால், தனக்கும், தனது குடும்பத்தாருக்கும் இழிவைத் தேடிக்கொண்டது மல்லாமல், தனது நிலைமையைக்கூட மிகவும் கேவலமான ஸ்திதிக்குக் கொண்டுவந்ததைக் கண்ணுற்ற ஜான்ஸன், மிக வருந்தி ‘மதுபான விலக்கே’ தனது ஜீவித வேலையாகக் கருதினர்.

ஆதலால், தானும் ஒரு கள்ளுக்கடை வியாபாரியாக பாவித்து அவர்களின் உண்மை நோக்கத்தை அறிய ஆவலுற்றூர். அதற்காக மதுபானத்தைக் கண்டிப்பவரின் அபிப்பிராயங்களை மறுப்பதற்குள்ள வழிகளென்னவென்று, மது வியாபாரிகளுக்கு ஜான்ஸனவர்கள் ஓர் கடிதம் விடுத்தார்; கடிதம் பின்வருமாறு :—

எனது பொருள் தேடும் மார்க்கத்தைத்தடுக்க முயலும் கனவான்களது முயற்சியை, விழச்செய்வது எங்ஙனமென வர்த்தகராகிய உங்களை நான் கேட்கிறேன். நீண்டகாலமாக உங்களுள் பகையேற்பட்டிருப்பதால் இதைக்குறித்து உங்களுக்கு நன்ருகத் தெரியுமென்பது எனது துணிபு. அவ்வழிகளை நாம் உடனே நெப்ருஸ்காவில் பின்பற்றவேண்டும். அவர்களுக்குப் பாதகமாக நாம் துண்டுப் பிரசுரங்கள் வெளியிடல்

வேண்டும். மது விலக்கில் ஒத்துழைப்பவரை நம் வசப்படுத்தல் கூடாத காரியமா? அரசாங்கத்தாரை நமக்குதவி புரியும்படி கேட்டாலென்ன? இதற்காக நாம் பொருள் சேகரிக்க வேண்டாமா? பத்திராதிபர்களையும் நம்மோடு கலந்துகொள்ளச் செய்ய வேண்டும். பல்வேறு வழிகள் இனியுமுள்ளதாயின் எனக்குத் தெரிவியுங்கள்.

இப்படிக்கு, தங்களன்புள்ள,

டப்ளியூ. ஜான்ஸன்.

மது வியாபாரிகள் ஜான்ஸனது வலையிற் சிக்குண்டு ஒவ்வொருவரும் ஏராளமான வழிகளை கடித மூலமாக ஜான்ஸனுக்கு அறிவித்தார்கள். அவைகளை யெல்லாம், பத்திரிகை வாயிலாக வெளியிட்டு, ஜான்ஸனவர்கள், வியாபாரிகளின் எண்ணத்தையும், சுயநலம் நிறைந்த நோக்கத்தையும் கண்டித்தார். அன்று முதல் நரித்தோல் புனைந்த புலியென ஜான்ஸனை மதுவியாபாரிகள் எண்ணினவாய், அவரைக் கொல்லுதற்குங் கூட வியாபாரிகள் துணிவுற்றார்கள்.

'வாய்ஸ்' எனும் பத்திரிகை வாயிலாக உத்தியோகஸ்தர்கள் மது வியாபாரிகளுக்குச் செய்த நன்மையை வெளியிட்டு, அதிகாரவர்க்கத்தினாது அடாத செய்கைகளை தேசத்தாருக்கு ஜான்ஸன் எடுத்துக் காட்டினர். இக்காரணத்தை முன்னிட்டு அப்பத்திரிகை அரசாங்கத்தாரால் அடக்கப்பட்டது. பின்பு தினப் பத்திரிகை ஒன்று துவங்கி, அதன் மூலமாகவும் மது பானத்தாலுண்டாகும் துன்பங்களை விரிவாய் ஜனங்களுக்குத் தெரியப் படுத்தினர். இவ்வித அவரது நற்செயல், வியாபாரிகளுக்குக் கோபத்தை உண்டாக்கியது. ஆதலால் அவர்கள் பத்திரிகை விற்கும் வாலிபர்களை காயப்படுத்தினதுமல்லாமல் பத்திரிகைகளை

யும் கிழித்து எறிந்தனர். இதைக் கேள்வியுற்ற நமது நண்பர் ஜான்ஸன் ஒருநாள் அவ்வியாபாரிகளோடு கலவரத்திற் காரம்பிக்கவும் போலீஸாரின் உதவியால் ஆபத்தொன்றுமில்லாது தப்பித்துக் கொண்டதாகவும் நாமறிகிறோம்.

1902-ல் ஜான்ஸன், ஜே. ஜி வூளியென்ற மதுவிலக்கையே முக்கிய தர்மமாகக் கொண்ட ஓர் உத்தமரின் சகாயத்தால் "இந்த நூற்றாண்டின் மது விலக்கு அபிவிருத்தி" என்ற ஓர் புத்தகம் எழுதினார்.

அம்மகான் 1902-ல் நியூவாய்ஸ் (New-voice) எனுமோர் புதிய பத்திரிகை வெளியிடலானார். அதன் வாயிலாகவும் தனது அபிப்பிராயங்களை ஜனங்களுக்கு அவர் போதிக்காமலிருக்கவில்லை. ஜான்ஸனது இவ்வபிப்பிராயங்கள் அவரை, அநேகம் மது விற்பவர்களின் பகைவராக்கியது. அக்காரணத்தாலேயே, ஓர் வியாபாரி ஜான்ஸன் அவர்கடைவழியாகக் கடந்தாரானால் அவரை தான் துப்பாக்கியால் சுட்டுவிடுவதாக பிரஸ்தாபம் செய்திருந்தார். இதையறிந்த எமது துரையவர்கள் மாறுவேடம் புனைந்து குதிரைமீதேறி அக்கடையை அடைந்தார். சென்றதும் உடனே ஒரு 'டாலர்' அவ்வியாபாரியிடம் கொடுத்து சிறிது நல்ல மது கொடுக்கும்படி வேண்ட, கடைக்காரர் தாழ்ந்த தரமான சாக்கைக் கொடுத்தார். கோபம் பிறக்க ஜான்ஸன் சீசாவை உடைத்தார். பின்னும் ஒரு சீசா மதுவும் முன்போல் செய்யப்பட்டது. பின்பு தனக்குக் கொஞ்சம் "புகையிலைசத்து" வேண்டுமென ஜான்ஸன் கேட்க, அதை யெடுக்கச் சென்ற தருணம் பார்த்து, வியாபாரியின் சட்டை பாக்கெட்டில் கிடந்திருந்த ஓர் கைத்துப்பாக்கியைத் தானெடுத்துப் பதுக்கிவைத்துக் கொண்டார். புகையிலை சத்துடன் திரும்பிவந்த கடைக்காரரை,

திருட்டுத்தனமாக விற்பனை செய்திருக்கிறாரெனக் கைது செய்து கேஸிலிழுத்து விட்டார். இவரது இவ்வித தந்திரமான செயலாலேதான் இவருக்கு 'புஸிபுட்' எனும் நாமம் வழங்கலாயிற்று.

1907-க்கும் 1911-க்கும் இடையில் இம்மாதிரி 5473 திருட்டு கேஸ்கள் கண்டு பிடித்து, அத்துணை வியாபாரிகளையும் கைது செய்யக் காரண பூதராகவிருந்தார்.

இவ்விதமாக மது வியாபாரிகளின் வெறுப்பிற்கும் கோபத்திற்கும் பாத்திரமானார். அதன் பயனாக நாளுக்கு நாள் அவரது பகைவர் அதிகரித்து வந்தனரென்பது வெளிப்படை. அவர்கள் ஜான்ஸனை நாடு கடத்தவோ இல்லையேல் கொன்றுவிடவோ திட்டம் பண்ணிக் கொண்டார்கள். அதற்காக பல பயனற்ற முயற்சிகளில் பற்றுள்ளவராய் ஈடுபட்டுழைத்து வந்தனர்.

இவ்வாறிருக்கையில் அமெரிக்காவிலுள்ள 'மது விலக்கு' சபைகளின் பிரதி நிதியாக ஜான்ஸன் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டார். அப்பொழுது அத்தேசத்தின் நிலைமை அவருக்கனுகூலமாயில்லை. ஆதலால் அங்கும் அவர் அபகீர்த்தியே தேடிக் கொண்டார். "மான் செஸ்டர் கார்டியன்" என்ற பத்திரிகை வாயிலாக ஆங்கிலேயர் தம்மீது கொண்டுள்ள தப்பெண்ணத்தை மாற்ற பன்முறை முயன்றும் பயனடைந்தாரில்லை.

ஒரு நாள் 'எஸக்ஸ்' ஹாலில் பிரசங்கம் செய்வதற்காக ஜான்ஸன் அழைக்கப்பட்டார். ஹால் முழுவதும் கல்லூரி மாணவர்களே நிறைந்திருந்தார்கள். உபன்னியாசம் துவங்கு முன்னரே ஜான்ஸனை ஏளனம் பண்ணினதுமல்லாமல் அக்கிராசனரையும், ஜான்ஸனையும் பிடித்துக்கட்டி, இவரைத் தெரு வீதிகளில் கொண்டு சென்றனர். இத்துணையும் போதாதென

ஜான்ஸனை மதுபானம் செய்யவும் கட்டாயப் படுத்தினார்கள். "புஸிபுட் புஸிபுட் கையில் அகப்பட்டுக் கொண்டான்" என்ற கூக்குரலுடன் மாணவர்கள் ஜெயக்கொடி பிடித்து, தெரு வீதிகளில் அவரைப் பின் தொடர்ந்தார்கள். மாணவர் கையில் நின்றும் கல்மாரி பொழிய ஆரம்பித்தது. கல்லெறி கொண்டதால் அமது நண்பரது கண் ஒன்று காயப்பட்டு விட்டது.

ஆனால் தம்மீது கல்லெறிந்தவரோடாவது, தன்னைக் கட்டி பரிகாச வார்த்தைகளுடன் தெரு வீதிகளில் கொண்டு நடந்த மாணவர்களோடாவது கோபமோ, பகையோ ஜான்ஸன் கொள்ளவில்லை. இப்பெருந் தன்மையை யறிந்த மாணவர் தமது மடமைக்காகப் பரிதாபப் படாமலிருக்கவில்லை. கண்டனக் கூட்டங்கள் அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் கூடி, மாணவரது செய்கை ஆக்ஷேபிக்கப் பட்டது. பத்திரிகைகளும் மாணவர்களை மிக்க கேவலமாக தாழ்த்திப் பேசலாயின.

நாட்கள் பல சென்றன. இவரைப்பற்றிய தப்பெண்ணம் ஆங்கிலேயரை விட்டுமாறத் துவங்கியது. அதன் அறிகுறியாக இவர் சிக்காயிருந்தபோது சக்கிரவர்த்தி அவர்கள் இவர்களின் தேக நிலைமையைப் பற்றிக் கேட்டதாகவும், பிரிட்டனிலே லாட் சான்ஸலர் மாணவரின் அநீதியைக் கண்டித்ததாகவும் புலப்படுகிறது.

'ஈவினிங் நியூஸ்' என்ற பத்திரிகையின் ஆசிரியர் ஒரு சிறு தொகை பணம் வசூல் செய்து இவருக்களித்தார். இம்மகான் தனக்காக ஒரு பைஸாக்கூட எடுத்துக்கொள்ளாது "ஸெயிண்டு டன்ஸ்டன் ஹாஸ்டலுக்கு" அத்தொகை முழுதையும் கொடுத்துதவினர்.

அப்பால் தேக அசௌகரியத்தால் வட ஆப்பிரிக்காவுக்குச்

சென்று, சிறிது காலம் தங்கிவிட்டு திரும்பவும் லண்டன் வந்து சேர்ந்தார். அப்பொழுது மதுவிலக்கை முன்னிட்டு நடைபெற்ற அரசாங்கத்தாரது முயற்சியைக்கண்டு அளவற்ற ஆனந்தமடைந்தார். 1920-ல் எப்ரல் மாதம் 15-ம் தேதி லண்டனை விட்டுத் தாய் நாட்டிற்குப் பயணமானுர்.

சொந்த நாடடைந்ததும் தனது தர்மமாகிய மதுவிலக்கை முன்னிட்டுப் பாடுபட்டு வெற்றிமாலை சூடினுர். அவரது விடா முயற்சியாலும், பெண் மணிகளால் அங்கு நடைபெற்று வரும் 'டெம்பரன்ஸ் யூனியன்' என்ற சபையின் முயற்சியாலும் 1917ஞு நவம்பரில் கூடின அமெரிக்கன் கான்பிரன்ஸில் மதுவிற்பனை ராஜ்ய எல்லைக்குள் கூடாது என தீர்மானஞ் செய்யப்பட்டது. அதன் பயனுய் அமெரிக்காவி லேற்பட்டிருக்கும் நன்மையை நவிலவல்லேன்.

இன்னும் இதைப்போன்ற, கள்ளுக்கடையே அவர்கள் காணியாட்சியாகவும், குப்பைமேடே அவர்கள் குடியிருப்பாகவும், புழுதியே அவர்கள் போர்வையாகவும், சாம்பலே அவர்கள் சப்பிரமஞ்சமாகவும், சாணமே அவர்கள் சாயும் மெத்தையாகவும், கள்ளே அவர்கள் ஸ்நானபானமாகவும், மலமே அவர்கள் போஜனமாகவும், ஆகாயமே அவர்கள் ஆடையாகவும், துன்பங்களே அவர்கள் துணைகளாகவும் நினைந்துள்ள குடிவெறியர்களை அவர்களது மீளா நரகத்தினின்று மீட்டும் பொருட்டு, உடல், பொருள், ஆவி மூன்றையும் தியாகம் செய்துவரும் ஜான்ஸன் அவர்களுக்கும், அதுபோலுழைக்கும் நம் பாரத நாட்டுத் தலைவர்களுக்கும், தீர்க்காயுளும், திடகாத்திரமும், விடாமுயற்சியும் அளிக்குமாறு, எல்லாம் வல்ல ஈசுவரனை நாமெல்லோரும் வாழ்த்துவோமாக. த. நா.

---

# கிள்ளைவிடு தூது.

---

வேறு.

1. ஓங்குசினை மேவி யுயர்ந்திருக்கும் பூங்காவிற்
பாங்குடனே நீடிப் பரிந்திருக்கு மஞ்சுகமே!
தீங்கனித்தே மாவிற் றிகழ்ந்துவளர் பைங்கிளியே!
எங்குமெனின் கூற்றை யியம்புதியோ வென்பிணைக்கே
ஆங்கால முண்டென் றறிகுதியோ வஞ்சுகமே!

2. தேன்பிலிற்று சோலைச் செறிந்தகுளி ர்நீழலிற்போய்
கான்பொதிந்த காவிற் கலந்திருக்கும் பைங்கிளியே!
ஆன்பயந்த பான்மா னமுதமொழிப் பாவைபின்பாற்
கூன்மதியேற் சாற்றுங் கவன் மொழிதான் கூறாயோ!
மான்விழியா டன்பான் மயக்கமுற்றுங் கூறாயோ!

3. கன்னலங்கா வைகிக் கனிந்தேற்கும் பேடுடனே
இன்னிசையிற் கூவி யினிமைநுகர் அஞ்சுகமே!
நின்பேடைபோ லென்மா னினிதினெனைக் கூடிலளால்
பொன்கவர்ந்த மெய்யாள் புறமகன்றாள் போயவள்பால்
என்கதியென் றெற்கே யிரங்காயோ வஞ்சுகமே!

4. தன்னோ டுடன்பிறந்தே தற்குரிமை யில்லார்போ
லென்னோ டுடன் பிறந்த வென்னகமு மென்கண்ணுங்
கன்னேர் மனதினர்போற் காய்தலற மாகுமரோ
மின்சேர் இடையாட்கே மெய்ப்படவே யித்துயரை
கன்னற் கவின்கிளியே காதலெலாங் கூறுதியோ!

---

5. வெவ்வாளி பெய்துபெய்து வேனிலனுங் கைசடைத்தான்
ஐவ்வேறு வெம்மலரு மற்றதுவே யண்டமெலாம்
நைவ்வேனு னைந்துருகி நன்னலமு மாய்ந்தயர்வேன்
கொவ்வைசேர் செவ்விதட்கே கூறுயோ பைங்கிளியே!
இவ்வாறே யுள்ளேனென் றிம்மாற்றங் கூறுயோ!

6. சிறுமதியைக் கண்ணுற்ற சேதாம்பல் போலமனம்
நறுநுதலைக் கண்டே நயப்புற் றிருப்புழியிவ்
வுறுதுயருக் காளாகி யாழவிதி வந்ததென்னே
பிறைநுதலாட் கிம்மாற்றங் கூறுயோ பைங்கிளியே!
பெறு நாட்கா ணுங்கொலெனப் பேசுதியோ பைங்கிளியே!

7. என்ன துயர்வரினு மெவ்விடுக்க ணுற்றிடினும்
நின்னை மறக்கிலன்யா னின்வழியே நின்றிடுவ
லென்ன விசைத்தநல வின்பமொழி தான்மறந்து
கொன்னே யிருந்திடுதல் குற்றமன்றே கோதையட்கே
இன்ன லியன்றிடுவே னென்றுரைப்பாய் அஞ்சுகமே!

8. நாணநய வேனினது நல்லன்பே வேண்டினனுற்
காணவெனி லெக்கட்டுங் காணேன் கடந்திடுவல்
ஊனுருந்து றப்பலெனு உள்குழைந்தே கூறியவள்
மாணல்ல செய்தொழிதல் மாண்பேயோ மால்கொண்டே
பாணிசைப்பாள் பான்மையது பார்த்துரையாய் பைங்
[கிளியே!

9. பல்லோர்க் குரைப்பின் பழித்திடுவர் பாழ்மதியென்
றல்லோ ரறியா ரகத்தினுறு நோய்வலியைச்

சொல்லே னெனினென் சுகமிழந்தேன் சோர்மனத்தே
யெல்லோ ரறிவா னியம்பிடுமென் பாழ்வதனம்
நல்வா னுதற்கே நவிலுதியோ பைங்கிளியே!

வேறு.

1. தனிமா தநியா யமதா யகல்வாள்
கனிவா யுரைகா தலெலா மறியாள்
நனிவாழ் குவனே நவில்வீர் கிளியீர்
இனியே னினியே னிசையீ ரிசையீர்.

2. அடல்வேள் மதனு லழிவே னயர்வேன்
மடலே றுவனே மனமாய் குவனே
கடல்கா மமதாற் கழிவே னழிவேன்
உடல்சாய் குவனே உரையீ ருரையீர்.

3. பொழில்வா யொழியா துலவா மயிலீர்
எழிலார் மயிலா ளிவண்வந் திலளோ
மொழியீர் தனியா னிடருற் றதுகண்
டொழியீ ருரையீ ருயிர்நல் குதிரோ.

4. கூவுங் குயிலென் குயிலெங் குரையீர்.
மேவுங் குயிலாள் மிகுநா ளறியேன்
காவுங் கழியுங் களிகாண் கிலனே
சாவுங் கருதேன் சகியே னுரையீர்.

5. மனமே யுரைவாள் மனதோ டிசையாள்
கனமோ கனமா தனலே வினளால்
இனமே கருதா ளிசையா ளிசையாள்
வனமே யனமே எனையோ துதிரோ. "நெல்லைவாசி"

---

உ

ஓம் விக்நேஸ்வராயநம:

# வள்ளி நாயகி

ஏரானைக் காவிலுமை என்னுனைக் கன்றளித்த
போரானைக் கன்றுதனைப் போற்றினல்—வாராத
புத்திவரும் பத்திவரும் புத்திரவுற் பத்திவரும்
சத்திவரும் சித்திவருந் தான்.

## முதலாம் அத்தியாயம்

### வெள்ளிக்கிழமை பள்ளிக்கூடம்

சாக்ஷாத்சிவ பெருமானின் திருநேத்திரங்களினின்றும் சுடரா யுற்பவித்து, சூரஸம்ஹார மூர்த்தியாய் வெளிப்பட்ட ஸ்ரீ குமாரக்கடவுள் திருவிளையாடல் செய்தருளிய, திருப்பறங்குன்றம், குன்று தோருடல், திருவேரகம், சோலைமலை, திருவாவினன்குடி, திருச்சீரலைவாய் என்ற அறுஸ்தலங்களுட் சிறந்த நன்னகருக்கு செயந்திபுரமென்றும், செயந்திமா நகரமென்றும், திருச்சீரலைவாயென்றும் இன்னும் பல காரணப்பெயர்களுமுள. இத்தலத்தின் பெருமை மகிமையை, அருணகிரியும் பகழிக் கூத்தருமே அளவிடவல்லார்.

தேவர்களுக்குப் பேரிடுக்கண் புரிந்த அசுரனாகிய சூரனை ஸம்ஹாரஞ் செய்தபின்னர், அம் முருகேசர் எழுந்தருள, அவர் பாதார மலர்களையே ஸதா சிந்தித்திருக்கும் தேவர்களும், முனிவர்களும், அந்தணர்களும், மற்றைய மூன்று வருணத்தார்களும் அவரைச்சூழ்ந்திருக்க, இந்நகர் வளத்திலும், அழகிலும், செல்வத்திலும் சிறந்து விளங்கியதால் இதற்கு திருச்சேந்தூர் என்றும் நாமகரணஞ் செய்யப்பட்டது.

இந்நகருக்கு குணபால் * சப்தநதிகளையும் தன்னுட்கொண்டும் திருப்தியடையாமல், 'இன்னும் ஏதேனும் உளதோ' வென்று சதாகாலமும் அலைகளை அலையவிட்டு கோஷ்டஞ் செய்துகொண்டிருக்கும் பெருங்கடலும், அதனருகிற் கோவிலும் கோபுரவாயிலும், அடியார்களின் பவப்பிணியைத் தீர்க்கும் அநேக தீர்த்தக் கட்டங்களும், மகத்துவம் பொருந்திய கந்தபுஷ்பகரிணியும், தென்பால் பருவதராஜ புத்திரியா யவதரித்த அங்கயற் கண்ணம்மையைத் திருமணஞ்செய்த ஆலமுண்ட கண்டனின் திருவிளையாடற் றலமாகிய ஆலந்தலை என்ற ஊரும், குடபால் † பொதிகாசலம், பாவநாச முதலிய தீர்த்தங்கள் தமிழ் முனிவரின் ‡ விருப்பத்தால் தாமிரவர்ணி நதியாயோட, அந்நதிதீர்த்தத்தால் நிரம்பிய பொய்கைகளும், வடபால் வீரபாண்டியன் பட்டணமும் எல்லைகளாயமைந்துள.

இந்நகரில், வெயில் அதிகமாயெரிப்பது வரை

---

* குணபால்=கீழ்திசை. † குடபால்=மேல்திசை.

‡ தமிழ்முனிவர்=அகஸ்தியர்.

விட்டு வெளிவந்தாருக்கேயன்றி மற்றோருக்குத் தெரியாது. கதிரோன் * இவ்வூரில் ஏனிவ்வளவு உக்கிரம் காட்டவேண்டுமெனில், ஸ்ரீ சுப்பிரமணியரைத் தரிசிக்க இவ்வூரிலுள்ள மரங்கள் தனக்கு இடங்கொடாத நிமித்தம், அவைகளை எரித்துவிடவே இங்ஙனஞ் செய்கின்றானென்பது தெற்றெனத்தெரியும். இதற்கோ இங்குள மரங்கள் பயப்படும்!

'மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தா மருவில்—பலியேல்
கடவு ளவிர்சடைமேல் கட்செவியஞ் சாதே
படர்சிறைய புள்ளரசைப் பார்த்து.'

என்பதல்லவா செய்யுள். மேலும் வெயில் எரிக்க வெரிக்க மழை அதிகமேயன்றோ.

இவ்விடத்தில் இராஜ அரண்மனைகளும், இலவச வைத்தியசாலைகளும், காவற்கூடங்களும், யாகசாலைகளும், பாண்டிய வம்சத்தினர்களால் நிருமிக்கப்பட்ட வசந்தமண்டபங்களும், தண்ணீர்ப்பந்தல் மண்டபங்களும், ஆயிரக்கால் மண்டபமும், கோவில்களும், உற்சவத்தேர்களும் பலவுள. வைசியராலும் பல அன்ன சத்திரங்களும், வேதபாடசாலைகளும், நந்தவனங்களும் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. இவ்வளவு சுருக்கமாய்ச் சொல்லியதிலிருந்தே நீங்கள் இவ்வூரைப்பற்றிஊகித்தறிந்துகொள்ளவேண்டும். இங்கு, பல கீழ்தரக் கல்விச்சாலைகளுடன் இராஜாங்க உயர்தர கலாசாலையுமொன்றுண்டு. இக்கலா சாலையிலேயே நம் கதை ஆரம்பமாகிறது. இக்கலாசாலை, இராஜகுமார

† கதிரோன்=சூரியன்.

கலாசாலை என்று சொல்லப்பட்டது. இதில், ஆண் பெண் இருபாலருக்கும் தனித்தனி வகுப்புக்களுண்டு. ஆண் பிள்ளைகளுக்கு ஆடவரே ஆசிரியராயும், பெண் பிள்ளைகளுக்கு மகளிரே உபாத்தியாயினிகளாயும் ஏற்படுத்தப்பட்டிருந்தனர். கலாசாலைக்கு அந்நாட்டு அரசனின்குமாரனும், அவ்வூர் தனவந்தராகிய தனபாலசெட்டியின் ஏகபுத்திரியாகிய வள்ளிநாயகியுமே இரண்டு குதிரைகள் பூட்டிய தனித்தனி வண்டியில் வருவது வழக்கம்.

இந்நகருக்கு வடக்கில் ஒரு காதவழிக்கு அப்பால் தாமிரவர்ணி நதியின் வடபாரிசத்தில் கொற்கை எனும் பட்டணம் இருக்கிறது.

‘கொற்கையான் மாறன் குலசே கரப்பெருமான்
பொற்கையா னகதை போதாதோ—நற்கமல
மன்றலே வாரி மணிவா சலையசைக்கத்
தென்றலே யென்வர்தாய் செப்பு.’

எனப்புகழ்ந்துரைக்கப்பெற்ற சிறந்த ஊர். இப்பட்டணமே பாண்டி நாட்டின் தென்பகுதிக்கு இராஜதானி. பாண்டியமன்னனின் ஏகபுத்திரனும் இனிப் பட்டத்திற்கு வரவேண்டியவனுமாகிய ‘மதியரசு, சுப்பிரமணிய ஜயவீர பராக்கிரம—குலசேகரப் பாண்டியனையே கொற்கை இளவரசனென்று கூறுவர். இவனே நாம் மேற்கூறிய இராஜகுமார கலாசாலையில் வாசித்துவந்தவனாகும். இவனது ஐந்தாவது வயதின் ஜன்ம நக்ஷத்திர தினத்தில் திருச்செந்தூர் இராஜகுமார கலாசாலை திருபிக்கப்பட்டதாகும். இவன் தந்தை மதுரையைத் தனது பிரதான நகராகக் கொண்டிருந்த போதிலும்,

இவனைக் கொற்கை இளவரசனென்று அழைத்து வந்தாலும், இவன் திருச்செந்தூரிலேயே வசித்து வந்தான். இவ்விராஜகுடும்பத்தில் பட்டத்திற்கு வரவேண்டிய மூத்தகுமாரனை 'கொற்கை இளவரசனென்று அழைப்பது பரம்பரை வழக்கம். தகப்பனர், சிவபெருமானின் திருவிளையாடல் ஸ்தலமாகிய மதுரை நகரின்கண் தங்கியிருந்தால், மகன், ஸ்ரீ சுப்பிரமணியர் திருவிளையாடல் புரிந்தருளிய திருச்செந்தூரிலிருந்தானென்பது வியப்பாகாது.

இப்போது நம் இராஜகுமாரனுக்கு வயது பதினேழேயாகின்றது. ஒரு கருநாகம் சுவர்ணக்கலயத்தை விழுங்குவது போன்ற, இவனுடை அழகிய—கருத்தடர்ந்த—கேசத்திற்கும், அவன் முகத்தில் பிரகாசிக்கும் இராஜ தேஜஸிற்கும், ஆஹா! என்னென்று சொல்ல! அவன்கையிலோர் சூலந்தாங்கி சிறிது நேரம் கண்களை யிமையாது நிற்பானுயின், அவனோர் மானிடனே யல்லனென்றும், அவனேமயில்வாகனரான ஸ்ரீ குமரவேளென்றும் கீழ்'வீழ்ந்து நமஸ்காரம் செய்வாரென்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடும். அவனைக் கண்ட ஸ்திரீகள் தமக்கு'இவன் போன்ற குழந்தையொன்று கிடைக்காதாவென ஏங்குவர். கன்னிப் பெண்களெல்லாம் தமக்கு இவனைப்போன்ற வரன் கிடைக்க மாட்டானுவென்றும், இவன் மாங்கலியம் சூட்டத்தக்க இராஜ வம்ஸத்தில் தாம் பிறந்தோமாவென்றும் மனம் கரைவர். இவ்வளவு அழகு'வாய்ந்த அவனுக்கு, நெற்றியில் சாந்துப் பொட்டொன்று இடப்பட்டிருப்பது, கறுப்பு, திருஷ்டிப் பரிகார

மென்று இடப்பட்டிருக்கிறதோ வேறெதனாலோ நமக்குத் தெரியாது. ஆனால் அஃதிடப்பட்டது அவனுக்கு பின்னும் அதிக அழகையே கொடுக்கிறது. அவன் நேத்திரங்களின் அழகைக் கண்ட மாதரும் கண்களுக்கு மைதீட்ட எண்ணுவரோ? இயற்கை அழகன்றோ அழகு. அஃதின்றிவீணாகக் கண்களுக்கு மைதீட்டுகின்றனரே என்? இவ்வூருக்கு புதிதாய் வந்தோர் இவனைக் காணின், உருவிலியாகிய மன்மதன் திருச்செந்தூரில் மட்டும் உருப்பெற்று விளங்குவான் போலும் என்றே யெண்ணுவார்கள். இத்தகைய சுந்தரரூபன் இனிப்பட்டத்திற்கு வரவேண்டிய அரசனென்றால் யாருக்குத்தான் விருப்பமிருக்காது! நிற்க,

தனபாலசெட்டியின் மகளாகிய வள்ளிநாயகியைச் சிறிது கவனிப்போம். இவ்வனிதாமணிக்கு வயது பதின்மூன்றாக இன்னும் ஆறேமாதங்களிருக்கின்றன. உருவத்தில் மஹா சௌந்தரியவதி. இரதியோ! பூமகளோ! * அன்றி, நாமகளோ! † அனந்தையோ! ‡ சகல லக்ஷ்மிகளும் சேர்ந்து ஒருருவாகிய அனந்தலக்ஷ்மியோ! § என வியப்புறத்தக்க எழில்வதனம் படைத்துள்ளவள்.

பூரணச்சந்திரனை யொத்த அவள்முகமும், வில்லைப்போன்று வளைந்த புருவங்களும், அவளை யறியாமலே அமிர்தம் போன்ற பார்வை கொடுக்கவல்ல நேத்திரங்களும், வைரக்கம்மல்களும் மாட்டல்களுமே அணியப்பட்ட காதுகளும், செவ்விய உதடுகளும்,

* பூமகள்=இலக்ஷ்மி. † நாமகள்=சரஸ்வதி. ‡ அனந்தை=பார்வதி. § அனந்த=அநேக.

புன்னகை தோன்றும் வாயும், அவ்வாயினின்று சிற் சில சமயங்களில் தோன்றும் ஒழுங்கும், பிரகாசமும் பொருந்திய தந்தபங்திகளும், ஓர் பிடிக்குள் அடங்கு வதுபோன்ற துவண்ட இடையும், உருண்டுதிரண்டு நீண்ட கரங்களும், இடையிடை தாழைப்பூ வைத் துப் பின்னி ரோஜா மலரொன்று சொருகிய தொடை வரையில் தொங்கும் அழகபாரமும் கண்டோர் மன தைக் கவருவன வாயிருந்தன. வள்ளிநாயகி ஒரு பெண்ணிற்காகவே அவள் தந்தை, அரைக்காத தூரத் திற்கப்பாலுள்ள திவ்விய சுனையைச் சார்ந்த இடத்தி லுண்டாகும் தாழை மலர்கள் முழுவதையும் குத்த கைக் கெடுத்திருந்தார். இதனுல் அரைக்காசும் செல வின்றி, இவ்வூர்ப் பெண்களுக்குத் தாழைமலர்கள் கிடைத்தன. செட்டியார் தன் புத்திரிக்கு பூவிற்கா கச் செய்துள்ள ஏற்பாட்டையும், அதனுலிவ்வூர்ப் பெண்கள் முழுமை யானவர்களுக்கும் இலவசமாய் புஷ்பங்கள் கிடைப்பதையும் நோக்கின் ஒருபாட்டு ஞாபகத்திற்கு வருகின்றது. அதாவது,

"நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம்"

என்றபடி வள்ளிநாயகி ஒரு பெண்ணிற்காக தினம் ஒன்றிற்கு மூவாயிரத்தைந்நூறு புஷ்பங்கள் புஷ்பிக் கத்தக்க தாழைகளை குத்தகைக் கெடுக்கவும், அதிலி ருந்து அவ்வூர் முழுவதுமே தாழை மலர்களிற் புரளு வது மென்றால், என்னே செட்டியார் தன் மகள்பால் வைத்துள்ள பிரீதி!

பிரமன், முன் அமிர்தம் பங்கிட்ட மோஹினியைக் கண்ணுற்று அவள் போலுமொருபெண்ணுண்டு பண்ண அவளே நமது வள்ளிநாயகியோ! அன்று இவளைப்போல் அழகிற் சிறந்த பெண்ணொருத்தி இருந்திருப்பாளேயானால், தேவருலகிலுமில்லாத அழகை மாந்தருலகில் சிருஷ்டித்ததேனென்று, பிரமனுடன் தேவர்கள் யுத்தத்திற்குப் போகவும் அதற்கஞ்சிய பிரமன் தாமரையினுட் புகவும் நேரிடாதே! மேலும், யாவருக்கும் வாய் இருக்கத்தானே செய்கிறது. ஆனால் நம் வள்ளிநாயகியின் வாயழகு ஒன்றே சகல லோகத்தையும் விலைகொள்ளப் போதுமானது. சிறிது புன்னகைபுலரும்போது, அவ்வாயினழகும், அச்சமயம் முகத்தில் தோன்றும் அதிதீக்ஷண்ய பார்வையும் சொல்லத்தாமோ? இம்மாதிரியுள்ளவற்றையெல்லாம் நேரிற் கண்டாருக்கேயன்றி மற்றோருக்குச் சொன்னால் அர்த்தமுமாகாது. அவைகளை தெளிவுறச் சொல்ல உலகத்தில் வார்த்தைகளுங்கிடையா. சில கதைகளில், சில பெண்கள் சிரித்ததிலிருந்து முத்துக்களுதிர்ந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வள்ளிநாயகியை நேரிற்கண்டவருக்கே, அத்தகைய நகைமுகத்தைக் கண்ணுற்றவர்கள், அதற்குத் தக்ஷணையாக முத்துக்களைக் கொட்டுவிப்பரென்பதே அதன் அர்த்தமென்று தெரியும்.

இராஜகுமார கலாசாலையில் ஒரு நாள், வெள்ளிக்கிழமை வகுப்புநேரத்திற்கு முன் நம் கதாநாயகி தன் வகுப்பிலுட்கார்ந்து பாடங்களை வாசித்துக்கொண்டிருக்கும்பொழுது, அவள் வகுப்புச் சிறுமியரெல்லாம்

தமக்குள் ஏதோ பேசிக்கொண்டு அவளிடம்வந்து, "வள்ளி நாயகி! சுந்துவிற்கு, நேற்று நமது உபாத்தியாயினி அம்மாள் சொல்லிய சரித்திரத்தில், குறவள்ளி நாயகிக்கு யார்மாப்பிள்ளையென இன்னமும் தெரியவில்லையாம்." என்றார்கள்.

வள்ளிநாயகி:—சுந்து கெட்டிக்காரியாயிற்றே; இது தெரியாமலா இருந்திருப்பாள்? வேடிக்கையாகச் சொல்லியிருப்பாள்; ஏண்டி சுந்து! பாடங்கேட்டுக்கொண்டே தூங்கினாயோ?"

சுந்தரி:-எனக்கென்னமோ ஒன்றுந்தெரியவில்லை; வள்ளி நாயகியாம்; நாரதமுனிவராம்; கிழவனும்; வளையற்காரனும்; வேடர்கூட்டமாம்; வேங்கை மரமாம்; சுப்ரமண்யராம்; இதில் யார்தான் வள்ளிநாயகிக்கு மாப்பிள்ளையோ தெரியவில்லை."

வள்ளிநாயகி:—"என்னடீ! கதையில் வருபவர்களெல்லாம் மாப்பிள்ளையா?"

சுந்தரி:—"பின், கதையில் வாராமலிருப்பவர்களா மாப்பிள்ளை?"

வள்ளிநாயகி:—"போடீ! நீ ஒரு பைத்தியக்காரி. நீ இப்படி இருப்பாயென்று நான் நினைக்கவேயில்லை; அதிருக்கட்டும், நமது ஊர் கோவிலில் முக்கியமாய் எந்தஸ்வாமி யிருக்கிறார்? அவருக்கு பத்தினியாக யாரைச் சொல்லுகிறார்கள்?"

சுந்தரி:—"கோவிலில் எத்தனையோ உருவங்களிருக்கின்றன. மேலும் பட்டர், அவருடைய அகமுடையாள், வரும் பிராமணர்கள் இப்படி எவ்வளவோ உருவங்களுண்டே. பிராமணரை அநேகர் 'ஸ்வாமி' என்

றே சொல்லுகிறூர்கள். இதில் யாரை நான் முக்கிய ஸ்வாமி என்று கண்டேன்?"

வள்ளிநாயகி:—"ஸ்ரீ வள்ளிநாயகிக்கு சுப்ரமண்யர் மாப்பிள்ளை என்....."

இதைச் சொல்லி முடிக்கு முன்னர் பக்கத்தி லிருந்த சிறுமியரெல்லாம், "ஹரஹர மஹாதேவா" என்று கடல் முழங்கியது போல் கோஷ்டித்து கைகொட்டிக் குதித்தார்கள்.

ஒருசிறுமி:—"என்டீ! உன் கல்யாணத்திற்கு எங்களை யெல்லாம் கூப்பிடக்கூடாதா?"

மற்றொருசிறுமி:—"என்னடி! குறவள்ளி நாயகிக்கு கல்யாணம் நடந்தபொழுது உன்னை யெல்லாம் கூப்பிட்டு சாக்ஷிக்கு வைத்தார்களோ? இதிலும் அப்படித்தான் நடந்திருக்கும்."

வேறொருசிறுமி:—"அகமுடையான் பேரை வாய் கூசாமல் சொல்லுகிறாயே. அவர் கேட்டால் சண்டை பிடித்துக் கொள்ளமாட்டாரோ?"

பின்னொருசிறுமி:—"இவள் அகமுடையான்நிரம்ப நல்லவர். இவள் என்ன சொன்னாலும் கோபித்துக் கொள்ளமாட்டார். அந்த தைரியத்தைவைத்துத் தான் சொன்னாள்."

வள்ளிநாயகிக்கு இப்பொழுது மற்றச் சிறுமியரின் சதியாலோசனை மனதிற்பட, வெட்கித் தலை குனிந்தாள். இச்சமயத்தில், பாடசாலை, ஆரம்பிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட மணிச்சத்தம் கேட்கவே சிறுமியர் யாவரும் தத்தம் இடத்திலமர உபாத்தி

யாயினியும் வகுப்பிற்குள் வந்தாள். ஆகவே அன்றைய பாடம் ஆரம்பிக்கப்பட்டது.

மறுநாட்காலை வள்ளிநாயகி கலாசாலைக்கு வந்து தன் வகுப்பிற்குள் நுழையும் பொழுது, அவள் வகுப்புச் சிறுமியரெல்லாம் அவளை எதிர் சென்றழைத்து, "தீர்க்க சுமங்கலிபவ," என ஆசிர்வதித்து, "மஹாராணி! தங்களுக்கு எழைகளின் வந்தனம்" என்று முழங்காற்படி யிட்டு நின்றார்கள். இதற்குள் மற்றிரண்டு சிறுமிகள் ஒரு பெரிய தாம்பாளத்தை, மஞ்சள், குங்குமம்—சந்தனம்—புஷ்பம்—தாம்பூலம்—பழம்—சினி முதலியவற்றால் நிறைத்து வள்ளிநாயகியின் காலண்டை வைத்து, தாமும் முழங்காற் படியிட்டுக் கொண்டனர். வள்ளிநாயகி, யாதொன்றும் தெரியாமல் திகைப்புண்டவள்போல் நின்று, "என்னடி தோழிகாள்! இதென்ன அதிசயம்! நம் பள்ளித் தோழிகளில் யாராவது புஷ்பவதியாகி, அதனால் அவர்கள் வீட்டார் பள்ளிச் சிறுமிகளுக்கு கொடுக்கச் சொன்னார்களோ? அப்படியானால் முழங்காற்படியிட்டு நிற்பது உங்களுடைய சொந்தக் கேலிபோலிருக்கிறது" என்றாள்.

அம்பிகை:—"எங்களை யெல்லாம் நீயா யெழுந்திருக்க உத்தரவு கொடுத்தாலன்றி நாங்கள் எழுந்திருக்க மாட்டோம்."

வள்ளிநாயகி:—"இதுவும் ஒரு கேலிபோலிருக்கிறது. தயவுசெய்து எல்லோரும் எழுந்திருங்கள்."

சிறுமியர்யாவரும்:—"உத்தரவுப்படியே மஹாராணி!" என்றெழுந்தார்கள்.

வள்ளிநாயகி: — "சீதாலக்ஷ்மி! இதெல்லாம் எதற்காகக் கொண்டு வந்தீர்களென்று எனக்குச் சொல்லக்கூடாதா ?"

இராஜாம்பாள்:—"வேறொன்று மில்லை; உன் கல்யாணத்திற்கு நீ எங்களை யெல்லாம் கூப்பிடாவிட்டாலும், உனக்குத் தயவில்லாவிட்டாலும், நாங்களாகவே உன்னைப்பார்க்க வந்தோம். அதோடுகூட இராஜ ஸ்ரீதரான உன் கணவரிடத்தில் குடிகளாகிய எங்களை இரக்ஷிக்கச் சொல்லவேண்டும்."

இதைக்கேட்டதும் வள்ளிநாயகிக்கு ஆற்றொணுத் துயருண்டாகி, கோபத்துடன், "நேற்றேதோ நான் சொல்லியதை தப்பாக அர்த்தம் செய்து கேலி செய்ய ஆரம்பித்தீர்கள்; அதைமறுத்துச் சொல்வதற்குள் அந்தப்பாழும்மணிபடித்துவிட்டது; அதையொரு பெரிதாக எடுத்து இன்றும் என்னைப் பரிகாசம் செய்ய ஆரம்பித்து விட்டீர்கள்; பெண்களுக்கு இந்தமாதிரி அற்பத்தனம் உதவாது. நமது கடவுளைப் பற்றி ஏதாவது சொன்னுல் அதை ஒரு சாக்காக வைத்து கேலி பண்ணுகிறீர்களே" என்ருள்.

சீதாலக்ஷ்மி:—"கோபித்துக்கொள்ளாதே; உன்னுடைய அழகிற்கும், குணம், நடையுடைபாவனை முதலியவற்றிற்கும் நமது இளவரசரே சரியான அகமுடையான் என்றெண்ணி நாங்கள் அவ்விதம் சொன்னேம். மேல்மாடியில் அவர் உலாவும் பொழுது எவ்வளவு அழகாயிருக்கிறது. எதிலும், அவரே உனக்குச் சரியான அகத்துக்காரர். மேலும் உன் பெயரோ வள்ளிநாயகி. அவர் பெயரோ, குறவள்ளி நாயகியின்

கணவர் பெயராகிய சுப்ரமண்யர். ஆகையினுல் நாங் கள் யாவரும், அவரே உனக்குச் சரியான மாப்பிள்ளை யெனச் சந்தோஷப்பட்டே இவை யெல்லாம் செய் தோம். இரண்டும் சரியான அழகு."

இதுவரை நாணமும் வெட்கமும் மேலெழக் கேட்டு நின்ற வள்ளிநாயகி, "சீதா! இம்மாதிரியான பேச்சுக்கள்பேச உங்களுக்கெல்லாம் கொஞ்சமேனும் வெட்கமில்லையா? நீங்கள்தான் ஊரிலுள்ளவர்களுக் கெல்லாம் புருஷன்,பெண்சாதி தேடிக்கொடுப்பவர்கள் போலிருக்கிறது. அழகாம்-பெயர் பொருத்தமாம்! நீ பிராமணப் பெண்; நல்ல அழகுள்ளவள். பெயரோ, ஜனகன் புத்திரியாகிய சீதாலக்ஷ்மி. உன்னை நமது ஊரில், பெரியகடை-நாராயண ஆசாரி மகன் ராமஸ் வாமிக்கு கல்யாணம் செய்வித்தால் சம்மதமிருக் குமே? அவனும் பூணூல் போட்டுக் கொள்ளப்பட்ட வன்தான். நீ, பிராமணப் பெண் என்ருல் அவன் விஸ்வபிராமணனல்லவா? நல்ல அழகுள்ளவன். ஸ்ரீ சீதா லக்ஷ்மியின் மாப்பிள்ளையாகிய ராமசாமியே அவன் பெயருமாகும். பெயர் பொருத்தமும் சரி தான். நாளை நான் உன்னைப்பார்க்க சந்தனம், புஷ்பம் முதலிய வற்றுடன் வர உனக்குச் சம்மதமோ?" என் ருள்.

இராஜாம்பாள்:—"நாங்கள் தான் தெரியாமற் குற்றஞ் செய்துவிட்டால் அதை மன்னித்துக்கொள் ளக்கூடாதா? வள்ளிநாயகி! அதோபார்! அவள் அழத்துடங்குகிருள். ஐயோ பாவம்! நாங்களாவது உன்னை விட மேற்குலமாகிய க்ஷத்ரியவம்ஸ மாப்பிள்

ளையும், எக்குலத்தவரும் பணியும்படியான இராஜ குமாரனைச் சொன்னோம். நீ, ப்ராமணப் பெண்ணை அவளினும் தாழ்ந்த ஜாதியானான கம்மாளப்பைய னைக் கல்யாணஞ் செய்யச்சொன்னாயே. என்னடி யம்மா? மேல் கீழ் என்றதார தம்யமாவது வேண் டாமா?"

வள்ளிநாயகி:—"என்னடி மேல் கீழ்? ஒவ் வொருவருக்கும் அவரவர் குலமேமேல், நீ உன் குல மேமேலென்றால் ராமசாமி தன்குலமேமேலென்று சொல்லிக்கொள்ளவில்லையா? அவளைவிடத் தாழ்ந்த குல மென்று அவளுக்கு வருத்த முண்டாயிற்றுபோ லிருக்கிறது. எனக்கும் அப்படித்தானே யிருக்கும். க்ஷத்ரிய ரென்றால் யாருக்கென்ன? எங்கள் ஜாதி ஒழுக்க மென்ன, எங்கள் ஜாதி வழக்க மென்ன, தர்ம சிந்தனை யென்ன, தெய்வபக்திதானென்ன, அதற்கு எவரிடாவர்? அரசராம்! அரசருக்கும் அவர்கள் சந் ததியாருக்குமே மண், பெண், பொன் என்ற மூவா சையும் ஏற்பட்டதாயிருக்கிறது. இவர்களில்லாவிடில் அகராதியிலிருந்து இப்பதத்தையே எடுத்து விட லாம். போதுமென்ற மனங்கொள்வதேயில்லை. மண் ணாசையால் விண் முகாந்தரங்கள் வைத்துக்கொண்டு வேற்றரசர் மீது படையெடுத்துப்போய், அநியாய மாய் அநேக உயிர்களை வதை செய்து அவர்கள் நாட் டைக் கவர்கிறார்கள். திருடர்களையும் கொலைபாதகர் களையும் தண்டிக்க ஏற்பட்டு விடுகிறார்கள்! திருடர் களும் இம்மாதிரி ஆசை மேலிட்டுத்தானே திருட்டு களும், கொலைகளும் செய்கிறார்கள். திருடர்களுக்கும்

இவர்களுக்கும் என்ன வித்தியாசம்? க்ஷத்ரியர்களுக்குள் இராணுவச்சட்டமாம், யுத்தத்தில் பின்வாங்கினால் கேவலமாம்! யாருக்குத்தான் பிராணாவஸ்தையில் விருப்பமிருக்கும்? அரசன் மூக்கையும் வாயையும் ஒருவன் இறுகப்பிடித்து மூச்சுவிடாதபடி செய்து கொண்டால், அரசன் அந்தப் பிடியிலிருந்து விடுவித்துக்கொள்ள பிரயாசைப்படமாட்டான் போலிருக்கிறது! அப்படிப் பிரயாசைப்பட்டால் உயிரின் மேலுள்ள ஆசையாற்றானே? அது போல் தானே படையிலுள்ளவர்களும், தம்மிலும் வலிவுடையாரைக் கண்டால் தம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளப் பின்வாங்குவார்கள். சில அரசர்கள் பெண் பித்துப் பிடித்தவர்களாய் எத்தனை பெண்களைக் கல்யாணம் செய்துகொண்ட போதிலும் திருப்தியடையாமல், அபலைகளாகிய இளங்கன்னியரை கற்பழிப்பவர்களாயுமிருக்கிறார்கள். சீ சீ! இத்தகைய அரசர் குலத்தை எங்கள் குலத்திலும் மேலெனச் சொல்லிவிட்டாயே. நீயும் உன்னைப்போலொத்தவர்களுமே பெரிதாய்ச் சொல்லிக்கொள்ளவேண்டும். எங்கள் குலத்தில் பண ஆசை அதிகமென்று சிலர் சொல்லுகிறார்கள். சிறிதேனும் தர்மநெறி தவறிச் சம்பாதிப்பவர் எங்களிலில்லை, சொற்பவட்டிவாங்கி, செட்டாய்ச் செலவு செய்து, 'பூசணிக்காய் போகும்வழியைக் கவனிக்காது, கடுகு போகும்வழியை அடைப்பதுபோலி'ராமல் கணக்குவழக்குகளை ஒழுங்காய் முடிப்பார்கள். 'திரை கடலோடியுந் திரவியந்தேடு' வார்கள். தேடியபொருளை, சாலைவைத்தல், அன்னதானசத்ரம், தண்ணீர்ப்

பந்தல், திருப்பணிகள், வித்தியாசாலைகள் முதலிய தர்மவிஷயங்களில் அதிகம் செலவிடுவார்கள். செல் விருந்தோம்பி வரும் விருந்திற்குக் காத்திருப்பார்கள். எங்கள் குலப்பெண்களோ, தங்கள் தங்கள் குடும்ப சம்ரக்ஷணைகளைக் கவனித்து, நீதி நூற்பிரகாரம் அதிகாலையிலெழுந்து, கடவுளையும் கணவனையும் வணங்கி வீடு வாசல்களைச் சுத்தம்பண்ணி பின் ஸ்நானம் செய்து தாங்களே சமைத்து, அதிதிகளுக்கு அன்னமிட்டு, வீட்டிலுள்ளோர் உண்டபின் தாமுண்பர். அரசர்களின் வீடுகளிலோ ஒவ்வொருவேலைக்கும், வேலையாட்களும் பணிப்பெண்களும் இருப்பார்கள். அவர்கள் வீட்டுப் பெண்களோ 'கோவில் மாடுகள்' போல் ஒரு வேலையுஞ் செய்யாமல், புதிது புதிதாய் நகைகளும் வஸ்திரங்களும் வாங்கி யணிந்து வீண் பேச்சுகளும் கதைகளும் பேசிக் காலம் கழிப்பார்கள். இப்படிப்பட்டவம்ஸத்தினரோமேல்? இனிஇதைப்போல் பரிகாசவார்த்தைகளொன்றும என்னிடம் பேசவேண்டாம். அப்படி இனிப்பேசுவீர்களாயின், தலைமை உபாத்தியாயனியிடம் மனுச் செய்துகொள்வேன். சீதா! நீ மனவருத்தப்படாதே. நானும் உன்னைப் போன்ற பெண்தானே. என்னை அப்படிப் பேசினுல் எனக்கு வருத்தமிருக்காதா? என்தோழீ! கண்ணீர் விடாதே" எனப் புகன்று சீதாலக்ஷ்மியின் கண்களைத் துடைத்தாள்.

சீதாலக்ஷ்மியும் ஒருவாறுதேறி, "வள்ளி நாயகி! நான் தெரியாமல் தான் சொல்லிவிட்டேன். அதற்காக நான் மிகவும் வருத்தப்படுகிறேன். இனி, இத்தகைய பேச்சொன்றும் நமக்குள் வேண்டாம்" என்ருள்.